بسم الله الرحمن الرحيم
نحمده ونصلي على رسوله الكريم

# நூருல் இஸ்லாம்

(ஓர் உயரிய செந்தமிழ் மாசிகை)

# NOOR-UL-ISLAM

(AN EXCELLENT TAMIL MONTHLY)

ஆசிரியர் : A. N. ஹாபிஸ் முஹம்மது யூசுப் (பாஜில் பாகவீ)

மலர் - 3 | ஹிஜ்ரீ 1361ஹு ஷஃபான், ரமலான்மீ / கி.பி. 1942ஹு செப்டம்பர், அக்டோபர்மீ | இ. - 11, 12

## சற்குணப்பிரம்மம் அல்லது ஸிபாத்துல்லாஹ்

## SARGUNA BRAHMAM or SIFATHULLAH

"(ஏ நபியே!) சொல்வீராக: அல்லாஹ் உங்களை உயிர்ப்பிக்கிறான். பின்னர் உங்களை மரணமடையும்படியும் செய்கிறான். (இதற்குப்) பின்னர் உங்களை (யெல்லாம்) இறுதி நாளில் ஒன்று சேர்க்கவும் போகிறான். (நாம் மேலே கூறிய) இதில் எத்தகைய ஐயப்பாடுமில்லை. ஆனால் மனிதர்களுள் பெரும்பாலோர் (இதனை) அறியாதவர்களாகவே யிருக்கின்றனர்."

(அல்ஜாதியா 45:)

"இன்னும் பூமியுடையவும் வானங்களினுடையவும் (உண்மையான) அரசாட்சி அதிகாரமானது, அல்லாஹ்வுக்குரியதாகவே யிருக்கிறது. அமளியான (இறுதி) நாளின்போது (அது சமயம்) பொய்யர்கள் (சொற்படி நடக்காதவர்கள்) நஷ்டவாளிகளாயிருப்பர்."

(அல்ஜாதியா 45:)

"வானங்களையும் பூமியையும் அவைகளிரண்டுக்குமிடையே இருப்பவைகளையும் சத்தியத்துக்காகவும் (ஒரு உண்மைக்காகவும்) ஒரு குறிப்பிட்ட தவணைக்காகவுமே நாம் சிருஷ்டித்துள்ளோம். நன்னம்பிக்கையற்றவர்கள், அவர்களுக் கச்சுறுத்தப்பட்டதைக் கவனியாமல் (வேறான வழியில்) திரும்பிச் செல்லுகின்றார்கள். (இதன் பலனை அவர்கள் குறிப்பிட்ட நாளில் அல்லாஹ்வின் ஏற்பாட்டின்படி தங்கள் எண்ணத்துக்கும் செய்கைக்கும் தக்க முறையில் பிரதிபலனடையவே போகின்றனர்)" (அஹ்காப் 46:)

"வானங்களையும் பூமியையும், அவைகளைச் சிருஷ்டிக்கும் போது எத்தகைய களைப்புமில்லாமல் உண்டு பண்ணிய அல்லாஹ்வாகிய அவன் மரணமடைந்தவர்களை (யெல்லாம்) மீண்டும் உயிர்ப்பித்துக் கொண்டு வரச் சக்தியுடையவனுயிருக்கிறுன் என்பதை நீங்கள் உணர்ந்து பார்க்க வேண்டாமா? (இல்லாமலிருந்த உலகத்தை உண்டுபண்ணிய ஆண்டவனுக்கு, உலகத்தை அழித்தும் திருத்தியும் மாற்றியும் கொண்டு வருவதில் யாது கஷ்டம் ஏற்படப் போகின்றது?) ஆம்; நிச்சயமாகவே அவன் சர்வ பொருள்களின் மீதும் பூர்ண சக்தி படைத்தவனுயிருக்கிறுன்." (அஹ்காப் 46:)

"நன்னம்பிக்கை கொண்ட (அல்லாஹ்வின் உண்மையான) அவர்களுக்கு அல்லாஹ்வே சிநேகிதனுய் (எஜமானுய்) இருக்கிறுன். (கோடிய வழியில் செல்லும்) நிராகரிக்கும் குணம்படைத்த அவர்களுக்கோ வெனின், அவர்களுக்காக (உண்மையான) சினேகிதர் (எஜமானன்) ஒருவருமே யில்லை. (இவ்வுலகிலும் சரி மறு உலகிலும் சரி உண்மையில் மனிதர்களுக்குச் சினேகிதனும் எஜமானனும் அளவற்ற கருணைபுரிபவனும் அல்லாஹ்வைத் தவிர்த்து வேறொருவரும் இல்லவே யில்லை. இதையுணர்ந்த சத்திய பக்தர்கள் சரியான வழியில் செல்லும்போது, அல்லாஹ் அவர்களுக்கு மேன் மேலும் வேண்டிய உபகாரங்களை செய்வதுடன் தானும் அவர்களுக்குரிய உண்மையான சிநேகிதத் தன்மை வாய்ந்த எஜமானனுய்ச் சமைந்தும் விடுகிறுன் என்பதை இங்கு சிந்தித்தல் வேண்டும்.)" (முஹம்மத் 47:)

"மேலும் அல்லாஹ்வானவன் (எவ்விஷயத்திலும்) யாருடைய தயவையும் வேண்டாதவனுயிருக்கிறுன். நீவிரோ (ஒரு கருமத்தைச் செய்து சாதிக்க வேண்டுமாயின் சர்வ அம்சங்களுக்காகவும்) தேவையுள்ளவர்களாகவே யிருக்கின்றீர்கள். எனவே (இதை ஏற்றுக் கொள்ளாமல்) நீங்கள் திரும்பிச் செல்வீர்களாயின், நீங்களல்லாத ஒரு கூட்டத்தை மாற்றிக் கொண்டு வர அல்லாஹ் சக்தியுடையவனுயிருக்கிறுன். அவர்களோ உங்களைப் போலிருக்க மாட்டார்கள்." (முஹம்மத் 47:)

"வானங்களுடையவும் பூமியுடையவும் (உண்மையான) அரசாட்சியானது அல்லாஹ்வுக்குரியதாகவே யிருக்கிறது. தான் நாடியவர்களுக்கு மன்னிப்பையளிக்கிறுன். அவன் நாடியவர்களைத் தண்டிக்கவும் செய்கிறுன். எனவே அல்லாஹ்வானவன், அடியார்களுக்குரிய பாவங்களை அதிகம் மன்னிப்பவனுக (அவர்கள் மீது) அதி அன்புள்ளவனுகயிருக்கிறுன்." (பத்ஹ் 48:)

"ஏ மானிடர்காள்! உங்களை ஆடவர்களாகவும் பெண்டிர்களாகவும் நாம் சிருஷ்டித்தோம். உங்களுக்குள் ஒருவருக்கொருவர் (எளிய முறையில்) அறிந்து கொள்வதற்காகப் பல கூட்டத்தார்களாகவும், பல கிளையார்களாகவும் உங்களை நாம் ஆக்கிவைத்தோம். (ஆனுல் உங்களுக்கு ஒரு விஷயம் மட்டும் ஞாபகத்திலிருக்க வேண்டும். அஃதென்னவெனின்,) அல்லாஹ்வின் பால் மிக மிக நெருக்கமானவர்கள் யாரெனின்' உங்களுள் அல்லாஹ்வுக்கு அஞ்சி நடக்கும் நேரான பாதையைப் பற்றிக் கொண்டிருக்கும் சிறந்தவர்களேயாம். அல்லாஹ் (சர்வ அம்சங்களையும்) அறிகிறவனுக (இரகசிய விஷயங்களை அறியும்) நுண்ணறிவுள்ளவனுகயிருக்கிறுன்." (ஹுஜ்ராத் 49:)

"(ஏ ரசூலே! உம்பால் வந்து தங்கள் மார்க்க சம்பந்தமாய் அதிக பெருமை கொள்ளும் காட்டு மிராண்டிகளான அறிவற்ற அவர்களுக்குச்) சொல்வீராக: உங்களுடைய சமயத்தையா (மார்க்கத்தையா) அல்லாஹ்வுக்குக் கற்றுக் கொடுக்கின்றீர்கள்? அல்லாஹ்வோவெனின், வானங்களிலுண்டானவைகளையும் பூமியிலுண்டானதையும் நன்கு அறிகிறவனுயிருக்கிறுன். ஆண்டவன் சர்வ வஸ்துக்களையும் அறிகிறுன். (எனவே, நீங்கள் ஆண்டவனுக்கு எத்தகைய அம்சத்தையும் மார்க்க போதனையையும் கற்றுக் கொடுக்க வேண்டிய அவசியமில்லை)" (ஹுஜ்ராத் 49:)

"வானங்களிலும் பூமியிலும் மறைந்து கிடப்பனவற்றை நிச்சயமாகவே அல்லாஹ் அறிகிறுன். நீங்கள் புரியும் சர்வ காரியங்களையும் ஆண்டவன் பார்க்கிறவனுயிருக்கிறுன் (என்பது உங்கள் ஞாபகத்திலிருக்கட்டும்)." (ஹுஜ்ராத் 49:)

"நிச்சயமாகவே பூமியானது மனிதர்களுள் எவ்வளவு குறைத்துக் கொண்டு வருகிறது (மரணமடைந்தபின் மாநிலத்தில் மறைந்து போகின்றவர்கள்) என்பதை நாம் அறிவோம். (உயிருடன் ஜீவித்திருப்பவர்கள் எவ்வளவு பேர், மாண்டு மடிந்து போனவர்கள் போகின்றவர்கள் எவ்வளவு பேர் என்பதையும் நாம் அறிவோம்.) எனவே, நமக்காக பத்திரமாகப் பாதுகாக்கப்படும் ஒரு கிரந்தமுண்டு. அதில் சர்வ

காரியங்களும், நடைபெறும் ஒவ்வொரு கருமமும் இருந்தே வருகின்றன.” (காப் 50:)

“மேலும் மனிதர்களை நாம் சிருஷ்டித்தோம். மனிதனின் மனது என்ன நாடுகிறது என்பதையும் நாம் அறிவோம். (இஃதெங்ஙனம் எமக்குத் தெரியும் என்று எவரும் எத்தகைய முறையிலும் சந்தேகிக்க வேண்டியதில்லை. என்னெனின்,) நாம் கழுத்துப்பட்டை நரம்பைக் காட்டினும் அதிக சமீபமாகவே (நெருக்கமாய்) மனிதன்பால் இருந்து கொண்டிருக்கிறோம். (எனவே, அவர்கள் எண்ணுவதும் செய்வதும் சொல்லுவதும் எமக்குத் தெரியாமல் எப்படியிருக்க முடியும்? என்பதையே நீங்கள் சிந்தித்தல் வேண்டும்.)” (காப் 50:)

“நம்மிடம் வார்த்தை (சொல் வாக்குறுதி) மாற்றப்பட்டு விடுமென்பதில்லை. யான் அடியார்களுக்கு எத்தகைய முறையிலும் அக்கிரமமிழைப்பவனாகவுமில்லை. (எனவே என்னுடைய வார்த்தையிலோ வாக்குறுதியிலோ யான் சொல்லும் எந்த அம்சத்திலோ அடியார்களாகிய நீவிர் சந்தேகங் கொள்ள வேண்டியதேயில்லை. இப்படியே நீங்கள் நல்லோராய்ச் சமைந்திருக்க, யான் அநியாயமாய் நடந்து கொள்வேனென்று நீங்கள் எண்ணாமலிருக்க வேண்டும்.)” (காப் 50:)

---






ஜீவிய சந்தா ரூ. 100—0—0 | இந்தியா, ஸிலோன் நாடுகளுக்கு ரூ. 3—0—0
போஷக சந்தா ரூ. 25—0—0 | மாதிரிப் பிரதி (தபால் செலவுடன்) 0—5—0

**விளம்பர விகிதம்**

1 பக்கத்துக்கு 1 மாதம் மட்டும் ரூபா 25
½ ,, ,, ரூபா 15

[குறிப்பு:—சந்தாவோ, விளம்பர சார்ஜோ எதுவும் முன்பணமாகவே அனுப்பப்பட வேண்டும்.] நூ. இ. மானேஜர்.





## இழந்த பொருள்—THE LOST TREASURE

உலகம் தோன்றிய ஆரம்பமுதற்கொண்டே ‘இஸ்லாம்’ என்பது இருந்து கொண்டுதானிருக்கிறது. ஆண்டவன்பால் உண்மையான மார்க்கமாய் அமைந்திருப்பதும் ‘இஸ்லாம்’ தான். அவன் ஆதியில் காட்டிய வழியும் ‘இஸ்லாம்’ தான். ஒவ்வொரு தீர்க்கதரிசியும் அவ்வக்காலத்தே காணப்பட்டு வந்த மக்களுக்கெல்லாம் எடுத்துக் காட்டிவந்ததும் ‘இஸ்லாம்’ தான். எத்தனையோ சங்கட்டங்களுக்குள்ளெல்லாம் சமயம் சிக்குண்டபோதும் தப்பி வெளியே வந்ததும் ‘இஸ்லாம்’ தான். மக்களுக்கு இறுதியாய்ச் சர்வ துறையிலும் நேரான வழியைக் காட்டியதும் ‘இஸ்லாம்’ தான். சத்திய முறையில் சீராய் நேராய் நடந்து சென்று சீரிய மக்களாய்ச் சமைந்தவர்களின் மார்க்கமும் ‘இஸ்லாம்’ தான். மேற்குறிப்பிட்ட விஷயங்களை சத்திய வேதமாம் குர்ஆன், பலவாறு பல வகையாய் நன்கு எடுத்துக் காட்டியிருக்கிறது.

இத்தகைய மாபெரும் சக்தி வாய்ந்த ‘இஸ்லாம்’ என்னும் சமயத்தைக் கைக்கொண்டவர்களே முஸ்லிம்களெனக் கொள்ளப்படுகின்றனர். இவர்கள் முக்கிய லட்சியம் உலக சமாதானமும் மக்களின் மன அமைதியுமேயாம். இதன் பயனைப் மனிதர்களாய்த் தோன்றியவர்களெல்லாம் சீரிய முறையில் சாந்தி நிகேதனம் சேர வழி தேட வேண்டியவர்களாயிருக்கின்றனர்.

தேடியலைந்து இல்லையெனத் திரும்பி வெறுப்புற்றுப் போக ஒருவருக்குமே இதில் வழியில்லை.

ஆனால் ஒரு மனிதன் தனக்குரிய உண்மையான அந்தஸ்தையும், கௌரவத்தையும் மேலான பதவியையும் அடைய விரும்புவானாயின் அதற்குரிய வழி 'இஸ்லாம்' எனும் மார்க்கத்தில் சரியாய் அமைந்தேயிருக்கிறது. மனிதர்கள் குறிப்பாய் முஸ்லிம்கள் தாங்கள் நினைக்கின்றபடி தெளிந்த தாவள்யமுள்ளவர்களாய் இல்லை யென்றால், அவர்கள் செய்கைகளும் மனோ எண்ணங்களுமே இதற்குக் காரணங்களாய் அமைந்திருக்கின்றன. இவர்கள் சீர்குலைந்து கிடப்பதற்கு இஸ்லாம் எத்தகைய முறையிலும் ஜவாப்தாரியாய் இருப்பதற்கில்லை.

உண்மை இங்ஙனமிருக்க. இஸ்லாத்தைக் கடைப்பிடித்திருக்கிறோம் என்று கூறிக்கொள்ளும் நாம், இது சமயம் என்ன நிலையிலிருக்கிறோமென்பதைச் சீர்தூக்கிப் பார்ப்போமாயின், அதன் முடிபு யாதென்பதை நாம் சொல்லவேண்டியதில்லை. பொதுவாய் முஸ்லிம்கள் தங்களுக்குரிய அல்லது தாங்கள் அடையவேண்டிய அந்தஸ்து இல்லை எனலாம். இதற்குக் காரணம் ஆண்டவன் நமக்குக் காட்டிய நேரான வழியை நாம் பின்பற்றி நடந்து செல்லாமலிருப்பதே. இஸ்லாத்தை மார்க்கமாய் அருளிய ஆண்டவன், மக்கள் வியாபாரம் பண்ண வேண்டாமென்றோ, தொழில் முறையில் ஈடுபட வேண்டாமென்றோ, பலவகையிலும் தாங்கள் நேர்மையாய்ச் சம்பாதிப்பது கூடாதென்றோ எங்கும் மறுக்கவில்லை.

ஆனால் மனிதர்கள் தங்களுக்குள் கஷ்டமில்லாமலும் சங்கடமில்லாமலும் ஒருவர்க்கொருவர் இம்சைக்குள்ளாகாமலும், எத்தகைய முறையில் பொருள் திரட்டலாமென்பதைச் செவ்வனே எடுத்துக்காட்டியே இருக்கின்றான். இத்தகைய முறையில் நடந்து கொள்வதையும் யாரும் மறுப்பதற்கில்லை. ஆனால் அதை ஊர்ஜிதப்படுத்தாமலும் இருப்பது மனித இயற்கைக்கும் விரோதமானதாகும்.

இம்முறையில் ஒவ்வொருவரும் தான், தன் மனைவி, தன் பிள்ளை, தன் சோதர சோதரிகள், தன் நெருங்கிய பந்துக்கள், தன் நண்பர்கள், தன் சமூகம், தன் தேசம் என்ற முறையில் படிப்படியாக அன்பைப் பெருக்கி ஆதரவை நல்கி வருவராயின், அதன்பிறகே ஒரு சமூகத்தில் ஒரு குடும்பத்தில் ஒரு வீட்டில் தனக்கும் பெரிய திருப்தியும் சாந்தியும் சமாதானமும் உண்டாக முடியும். தன்னளவில் சரி, தன் மனையளவில் சரி, தன் மக்களளவில் சரி என்றிருப்பவர்களும் அச் சமூகங்களும் என்றே முன்னேற்றமடைய முடியும். இன்றைக்கிருப்பது நாளைக்கிருக்காது, இன்று கிடைத்தது நாளை கிடைப்பதற்கில்லை என்று எங்கும் மக்களை ஒரு சமூகத்துள் மேலும் மேலும் அதிகப்பட்டுக்கொண்டே போனால் அச் சமூகம் என்றுதான் தலை யெடுக்க முடியும்? அரசியலில் நமக்கு ஒப்பற்ற சேவை புரிந்துவரும் நமது தலைவர் காயிதே ஆஜம் ஜனப் ஜின்னாஹ் அவர்கள், முஸ்லிம் லீகுக்கு பத்து லட்ச ரூபாய் தேவை என்று கேட்டார். அவருக்குச் சேர்ந்தது இதுவரையில் இரண்டேகால் லட்சம்கூட இல்லை. இதில் அவருக்கு



நஷ்டமா? யாருக்கு நஷ்டம்? வயதான காலத்தில் பல்லாயிரக் கணக்கான வரும்படி வரக்கூடிய வழியில் அவர் தமது முழு நேரத்தையும் செலவழித்தால் யார் என்ன செய்ய முடியும்? அப்படிப்பட்ட அவர் இப்படிப்பட்ட சமூக சேவையில் இறங்குவானேன்? எதிரிகளின் திட்டுகள் குறை கூறுதல்கள் பழிகளுக்கெல்லாம் ஆளாவானேன்? நன்கு யோசித்துப் பாருங்கள்.

உலகில் ஒருவர் உழைக்கிறார், நாம் பக்கத்தில் பார்த்து மகிழ இருக்கிறோம், புகழ இருக்கிறோம் என்று மட்டும் நினைத்து இருந்திடில் யாது பயன்? அவருக்கு வேண்டிய ஒத்தாசைகளை அவரவரும் என்னென்ன விதத்தில் என்னென்ன செய்ய முடியுமோ அந்தந்த விதங்களிலெல்லாம் செய்தாலன்றோ அவருக்கும் உற்சாகம், சமூகத்திற்கும் வெற்றி. இஃதொரு சிறிய ரகசியம். இதையறியாமல் நாம், மற்றவர்கள் இருக்கிறார்கள் பார்த்துக்கொள்ள என்று அவரவரும் சும்மாயிருந்துவிடில், முடிவு என்னவாகும். நாம் இழந்த பொருள் நமக்குக் கிட்ட வேண்டுமன்றோ. அதைப்பெற நாம் நம்மாலான உதவியைச் செய்யவேண்டாமா?

எனவே, இன்று முஸ்லிம்கள் இவ்வுலக கொந்தளிப்பில் ஒரு கட்டுப்பாடான ஒற்றுமையான திட்டத்தில் தங்களைச் சேர்த்துக்கொண்டு திரண்டு இருந்தால் தான், அவ்விழந்த பொருளை மீட்க முடியும். பிற சமூகங்களும் இவ்வாறே பெருமுயற்சியெடுத்து வெற்றி பெற்று வருகின்றன. யாருக்கு வந்த விருந்தோவென நாம் அலட்சிய புத்தியுடனும், சுயநலத்துடனும் இந்தச் சமயத்தில் இருந்துவிடுவோமாயின் இதன் பலாபலன் அதிவிரைவில் அனுபவிக்க நேரிடும் என்பதில் ஐயமில்லை.

தமிழ்நாட்டில் எல்லோரும் லீகைப்பற்றி சிறிது சிறிதாக மறந்து வருகின்றனரென்றே சொல்லலாம். மார்க்கத்தையும் மறக்க அவர்களுக்குத் துன்பங்கள் மேலும் மேலும் வரக் கூடியதாயிருக்கின்றது. இந்நிலையில் அவர்களைக் காப்பாற்றக் கூடிய தந்தைமார்கள் சமூகப் பெரியோர்கள் தாம் என்பதில் ஐயமேயில்லை. அவர்கள் பெரிய மனசு வைக்க ஆண்டவனே அருள் செய்ய வேண்டும். அன்றே நூ. இ. போன்ற பத்திரிகை வாயிலாய் மார்க்கபக்தி, தேசபக்தி, சமூகப்பற்று முதலியன ஏற்பட்டு முஸ்லிம் உலகம் தான் இழந்த அப்பொருளை மீட்க முடியும் என்று அறிவிக்கின்றோம். இஸ்லாத்தின் இழந்த பொருள் இதுதானென்றும், இத்தத்துவ சாஸ்திர உண்மையான பொருளைக் கைக் கொள்ளவேண்டுமென்றும் யாம் விரும்புகின்றோம்.

# உண்மை உபதேசங்கள் அல்லது குத்பாத்

## GOOD SERMONS OR GUTHBATH

BY MAULANA MAUDUDI

### III

கவனிக்கவேண்டிய அம்சங்கள் (3)

(முன் தொடர்)

சோதரர்காள்! தாங்களெல்லீரும் ‘லாஇலாஹ இல்லல்லாஹு முஹம்மதுன் ரஸூலுல்லாஹி’ என்று சொல்லிக்கொண்டு முஸ்லிம்களாய் இருக்கிறோமென்று கூறும் சமயம், ‘உங்களுக்கெல்லாம் ஆண்டவனின் சட்டமே உண்மையான சட்டமென்றும் அவன் ஒருவனே உங்களுக்குரிய சத்திய அதிகாரியா யிருக்கிறானென்றும் அவனுக்குத்தான் நாமெல்லோரும் வழிபட்டு நடக்கவேண்டுமென்றும்’ நீவிர் சொல்லாமலே வாக்குறுதி செய்வதா யிருக்கின்றது. இதை நீங்கள் கவனித்துப் பார்த்தல் அவசியம். இதுவுமல்லாமல் உங்களிடத்தில் நேரான மார்க்கமென்பதும் நியாயமென்பதும், அல்லாஹ்வின் வேதத்தின் மூலமும் அவனுடைய தூதரவர்களின் மூலமும் உங்களுக்குத் தெரிந்ததும் நீங்கள் அறிந்ததும்தான். அதாவது, உங்களுக்குரிய சர்வ அம்சங்களும் அல்லாஹ்வினால் சொல்லப்பட்டிருப்பதன்படி நடப்பதேயாகும். மேலேகூறிய பரிசுத்த வாக்கியமாம் ‘லாஇலாஹ இல்லல்லாஹு முஹம்மதுன் ரஸூலுல்லாஹி’ என்பதைக் கூறியவுடன் உங்களுக்குரிய சொந்த சுயேச்சையை விட்டும் நீங்கிவிட்டீர்கள் என்பதே தாத்பரியமாகும். பின்னர் உங்களில் ஒருவரும் எனக்குரிய நடைமுறை விஷயத்தில் என்னுடைய அபிப்பிராயம் இதுவாயிருக்கிறதென்றும், அல்லது உலக பழக்க வழக்கங்கள் இப்படி யிருக்கின்றனவென்றும், அல்லது வம்சபரம்பரைத் தொழிலே இதுதானென்றும், அல்லது குறிப்பிட்ட ஒரு பெரியார் மற்றொரு பெரியார் அதைக் கூறுகின்றார்கள். இதைக் கூறுகின்றார்களென்றும் கூறிக்கொண்டு, அல்லாஹ்வின் மார்க்கத்துக்கும் அவனுடைய தூதரவர்கள் காட்டிச் சென்றிருக்கும் வழிக்கும் விரோதமாய் எதையும் எடுத்துக்காட்ட உரிமையற்றவர்களாகவே யிருக்கின்றீர்கள்.

பின்னர் தாங்கள் செய்யவேண்டியதென்னவெனின், உங்களுடைய ஒவ்வொரு அம்சத்தையும் கிரியைகளையும் குர்ஆனுக்கும் ஹதீதுக்கும் எதிரே எடுத்துக்காட்ட வேண்டும். அதற்குச் சரியாய்த் தோன்றுபவைகளை ஏற்றுக்கொள்ளல் வேண்டும். அவ்விரண்டுக்கும் முரண்பாடுடையனவாய்த் தென்படின், அதை உடனே அப்பால் எடுத்து எறிந்துவிடவேண்டும். இஃது எவருடைய வார்த்தையாயினும், அல்லது எவருடைய மார்க்கமாயினும் அதைப்பற்றிக் கவலையே யில்லை. எனவே, இங்கு மற்றொரு விஷயத்தையும் நீங்களெல்லீரும் கவனித்தல் வேண்டும். அதாவது தங்களைத் தாங்களே முஸ்லிம்களெனக் கூறிக்கொண்டு பின்னர் குர்ஆனுக்கும் ஹதீதுக்கும் முரணாய் அமைந்த உங்களுடைய எண்ணத்தையோ உலக வழக்கத்தையோ ஒருபெரியாருடைய சொல்லையோ செயலையோ மேலானதெனக் கொள்ளத் துணிவீர்களாயின், இவ்விரண்டும் ஒன்றுக்கு மற்றொன்று முரண்பட்டதாகவே இருக்கும்.



குருடனொருவன் பார்க்கும் சக்தி தனக்குண்டெனச் சொல்ல முடியாது; மூக்கறையனொருவன் தனக்கு நாசி உண்டென நவில்வதும் முடியாது: இதே முறையில் ஒரு மனிதன் தன்னுடைய சர்வ காரியங்களையும் குர்ஆனுக்கும் ஹதீதுக்கும் ஐக்யப்பட்டதாய் அமைக்காமல் தன் அபிப்பிராயத்துக்கொப்பவோ உலக பழக்கத்துக்குத் தக்கவிதமாகவோ அல்லது வேறொரு மனிதனின் சொல் செயல் சம்மந்தப்பட்டோ அமைத்துக்கொள்ளத் துணிவானாயின் இவன் தன்னை முஸ்லிமென்று கூறிக்கொள்ள முடியவே முடியாது.

ஒருவன் தான் முஸ்லிமாயிருக்க விரும்பவில்லையாயின் அவனை யாரும் முஸ்லிமாய்த்தா னிருக்கவேண்டுமெனக் கட்டாயப் படுத்துவதற்கில்லை. அவன் தான் நாடிய சமய சந்தர்ப்ப மார்க்கத்தைக் கைக்கொள்ள சுயேச்சையுள்ளவனாகவேயிருக்கிறான். அவனுக்கு எப்பெயர்வேண்டுமாயினும் அதில் வைத்துக்கொள்ளலாம்; அதைப்பற்றியும் நாம் கவலைப்பட வேண்டியதில்லை. ஆனால் அம்மனிதன் தன்னை முஸ்லிமென்று கொள்வானாயின், இஸ்லாத்தின் எல்லைக்குள்ளால் இருக்குமட்டுமே அவன் முஸ்லிமாய் இருக்க முடியும் என்பதை மறந்துவிடுவது கூடாது. அல்லாஹ்வின் உபதேச வார்த்தையில் அவனுடைய தூதராம் ரசூல் (ஸல்) அவர்களுடைய வழியின்படியும் நடந்து செல்வதும் அதையே தனக்கு முக்கிய உரைகல்லாய் வைத்துக்கொண்டிருப்பதுமே இஸ்லாத்தின் எல்லைகளாய் அமைந்திருக்கின்றன. இவ்வெல்லைக்குள் இருப்பவனே முஸ்லிமாயிருக்கிறான். இதைத் தாண்டி அப்பால்

செல்லுகின்ற ஒருவன் இஸ்லாத்தை விட்டுமே அப்புறப்பட்டவனாய் அமைகிறான். மேலும் ஒருவன் தனக்குக் குறிப்பிட்ட எல்லையை விட்டு அப்பால் சென்றதன் பின்னும் மீண்டும் தன்னை முஸ்லிமென்றே எண்ணிக்கொண்டும் கூறிக்கொண்டுமிருப்பானாயின், அவன் தன்னையே ஏமாற்றிக் கொண்டிருப்பதுடன் உலகத்தாரையும் சேர்த்து ஏமாற்றுகிறான் என்றே கொள்ளல் வேண்டும். "அல்லாஹ் கொடுத்திருக்கும் கட்டளைப்படியும், சட்டப் படியும் தீர்ப்பு செய்யாத ஒருவன், காபிரானவனாகவே (முஸ்லிமல்லாதவனாகவே) அமைந்து கிடக்கிறான்" என்று குர்ஆன் கூறிக் கொண்டிருப்பது உங்கள் ஞாபகத்திலிருக்க வேண்டும். இதன் பிறகு நீங்கள் சர்வ சாதாரணமாய், "லா இலாஹ இல்லல்லாஹு முஹம்மதுன் ரஸூலுல்லாஹி" என்று கூறும் பரிசுத்த வாக்கியத்தின் கருத்தென்ன, தாத்பரியமென்ன? அதைக் கூறுவதால் கூறுபவனுக்குண்டாகும் பொறுப்புக்களென்ன கடமைகளென்ன வென்பதைக் கவனிப்போம்:

## IV

### கலிமாவின் பொருள் (1)

முஸ்லிம் சோதரர்காள்! மனிதன் 'கலிமா' வென்னும் ஒரு வாக்கியத்தைச் சொல்லியதன் பின்னரே 'இஸ்லாம்' என்னும் கோட்டைக்குள் நுழைகிறான் என்பதை அறிவீர்கள். அது அதிக நீளமாகவும் விரிவாகவுமில்லை. அக் கலிமாவென்பது, 'லாஇலாஹ இல்லல்லாஹு முஹம்மதுன் ரஸூலுல்லாஹி' என்று சொல்லப்படும் ஒரு சில சொற்களேயாம். இம் மொழிகளை நாவினால் சொன்ன மாத்திரத்திலேயே ஒரு மனிதன் வேறு மனிதனாய் மாறி விடுகிறான். இச் சொல்லைச் சொல்வதற்கு முன் காபிராய் (சத்தியத்தை நிராகரிப்பவனாய்) இருந்தான்; பின்னரோ முஸ்லிமாய் மாறி விட்டான். ஆதியில் அசுயை யானவன் எனக் கொள்ளப் பட்டான். இப்பொழுதோ பரிசுத்தமானவனாய்ச் சமைந்து விட்டான். முதல் முதலாய் அல்லாஹ்வுடைய கோபத்துக் குரியவனாயிருந்தான். இச் சொல்லைச் சொன்னதன் பின்னர் ஆண்டவனின் அத்தியந்த நண்பனாய்ச் சமைந்து விட்டான். முதன் முதலாய் நரக அக்கினி குண்ட வேதனைக் குரியவனாயிருந்தான். இப்பால் சுவனபதி யென்னும் உத்தியான வனச் சந்தோஷ வாயில் இவனுக்காகத் திறக்கப் பட்டு விட்டது. இவ் விஷயம் இத்துடன் நின்று விடவில்லை. மேற்கண்ட பரிசுத்த கலிமாவின் ஒரு சில சொற்களால் மனிதர்களுக் குள்ளால் மா பெரும் வித்தியாசங்களெல்லாம் உண்டாய் விடுகின்றன.

இச் சொல்லைக் கூறுபவன் ஒருசமுகத்தைச்சேர்ந்தவனாய் அமைகிறான். இதைமறுப்பவனோ வேறு சமயத்தவனாய்ப் பிரிந்து விடுகிறான். தந்தை இச் சொல்லைக் கூறியவனாகவும் தனயன் அதை நிராகரிப்பவனாகவுமிருந்தால் உண்மையில் தந்தை தந்தையாகவும், தனயன் தனயனாகவும் இல்லை யென்றே கூறி முடித்தல் வேண்டும். தந்தையின் சொத்தைத் தனயன் அடைய முடியாதவனாகவும் தனித்து விடுகிறான். தாயும், சகோதரிகளும் அவன் எதிரேமறைவின்றி நிற்க முடியாதவர்களாய் மாறி விடுகின்றனர். ஒருவன் தனது சொந்தத் தாய் தந்தையர்களுக்கு ஜனனமாயிருந்தும் இக்கலிமா வென்னும் சொல்லைச் சொல்லவில்லையாயின், தன் தாய் தந்தையர்களின் சொத்தை அடைய முடியாமற் போய்விடுவதுடன், ஒரு அந்நியனைப் போலவே அவன் அப்படியே அமைந்து விடுகிறான். சுருங்கக் கூறின், கலிமா வென்னும் இவ் வாக்கியமானது, அந்நியர்களாய் இருப்பவர்களை யெல்லாம் ஒன்று சேர்த்து விடுகிறது; தன் குடும்பத்திலேயே தோன்றியிருக்கும் மக்களைத் தனித்தனியே துண்டித்தும் விடுகிறது எனக் கூறலாம். மனிதர்களுக்குள் இரத்த சம்பந்தமும் உறவும் நெருக்கமாய் அமைந்திருப்பினும் இக் கலிமா வென்பது அச்சம்பந்தத்தைக் காட்டினும் அதிக பல முள்ளதாகவும் கூர்மையானதாகவும் அதிக வேகமாகவும் இருக்கின்றதென்பதை இங்குணர்ந்து கொள்ளல் வேண்டும்.

சோதரீர்! இதை நன்கு கவனித்துப் பாருங்கள்: இவ்வளவு பெரிய வித்தியாசம் மனிதர்களுக்குள்ளால் ஏன் ஏற்பட்டு விடுகிறது? இக் கலிமா வென்னும் சொல்லில் இருப்பதுதான் என்ன? இச் சொல்லில் ஒரு சில அக்ஷரங்கள் தாம் காணப்படுகின்றன. இதை ஒன்று சேர்த்து நாவினால் கூறிய உடன் அதில் என்ன சூன்யம் ஏற்பட்டு விடுகின்றது? ஒருமனிதன் தலைகீழாய் நேர் முரணாய் ஒருவனுக்கு மற்றொருவனாய் அந்நியனாய் ஏன் மாறி விடுகிறான்? தாங்களெல்லீரும் சிறிது ஆர அமர நிதானமாய் நுங்கள்புத்தியை செலுத்திக் கவனித்துப் பார்ப்பீர்களாயின், ஒரு சில சொற்களை நாவினால் கூறி விடுவதைக் கொண்டு மட்டும் இவ்வளவு வித்தியாசமும் குண மாறுபாடும் மனிதர்களுக்குள் ஏற்படுவதற்கில்லை என்று நீங்களெல்லாம் ஏற்றுக் கொள்வீர்கள். விக்கிரக வணக்கஞ் செய்யும் மக்கள் எண்ணுவதாவது, ஒரு மந்திரத்தைப் படிப்பதைக் கொண்டே மலைகளெல்லாம் நடுங்கும், பூமியும் பிளந்து கொள்ளும், ஊற்றுக் கண்கள் பல ஆங்காங்கே தோன்றும் என்பதே. அவர்கள் படிக்கும் அல்லது நாவினால் சொல்லும் அம் மந்திரத்தின் தாத்பரியமென்ன வென்பதை அவர்கள் தெரிந்து தெளிந்து கொண்டிருப்பினும், தெரிந்து கொள்ளாமலே போயினும் அதைப் பற்றி அவர்கள் கவலைப் படுவதேயில்லை. நாவினால் சொல்லும் ஒரு சில அக்ஷரங்களைக் கொண்டே மாபெரும் மாறுதல்களெல்லாம் தோன்றுமென அவர்கள் நினைக்கின்றனர். ஆனால் இஸ்லாத்தில் விஷயம் இங்ஙனமில்லை: இங்கு வேண்டியது தாத்பரியமே; அதன் பொருளே. அச் சொற்கள் பிரயோசனப் படுபவனவாய் அமைய வேண்டுமாயின், அவை சரியான கருத்துக்களையும் தாத்பரிய தத்துவங்களையும் கொண்டதாய் அமைதல் அத்தியாவசியமாகும். ஒருவன் அதன் தாத்பரியத்தையும் அதன் கருத்தையும் சரியாய் உணர்ந்து கொள்ளாமல், அச் சொற்களின் பலத்தால் உங்களுடைய எண்ணங்களும் கிரியைகளும் மாறவில்லையாயின், இப்படிப் பட்ட ஒரு கலிமாவை வெறுமனே சொல்வதால் வெற்றியும் பிரயோசனமும் ஒன்றுமேயில்லை.

(வரும்)

# 5000-ஆண்டுக் குறிப்புக்கள்

## 5000 YEARS' DIARY

(முன் தொடர்)

1805-ல் பிரஸ்போர்ட் உடன்படிக்கை ஏற்பட்டது.

1806-ல் தலைவர் பெட்டி என்பவர் மரணமடைந்தார்.

1807-ல் ஏலு, கர்யிலாஜ், கோபன், ஹாகன் யுத்தங்கள் நடைபெற்றன.

1808-ல் நேபிள்ஸ் யுத்தம்நடந்தது. இதே ஆண்டில் நெப்போலியன் போனபார்டியின் அரசாட்சி ஸ்பெயின்வரை பரவிற்று. பின்னர் போனபார்டி, ஸ்பெயினுக்கும் கூட சக்கரவர்த்தியானார்.

1809-ல் லாக்ரம் யுத்தம் நடைபெற்றது.

1809-ல் ஸ்காப்ரியூன் உடன் படிக்கை நடந்தது.

„ நெப்போலியன் தன்மனைவி ஜோஸிபைனுக்கு விவாக விடுதலையளித்தார்.

„ போப் சக்ரவர்த்தி, நெப்போலியன் மீது ஒரு மார்க்கத் தீர்ப்பளித்தார். இதன் பயனாய் நெப்போலியன் போப்பாண்டவரைக் கைது செய்தார்.

„ வில்லிங்டன், பிரான்ஸ் சேனையை வென்றார்.

„ ஜேம்ஸ் மெடிசன் அமெரிக்கத் தலைவரானார்.

1810-ல் நெப்போலியன் மேரியா சோலியா என்னும் பெண்ணை மணந்தார்.

1811-ல் நெப்போலியனுக்கு ரோமாபுரி மன்னன் ஜனனமானார்.

„ டீம்கானு யுத்தம் நடைபெற்றது.

1812-ல் அமெரிக்காவுக்கும் இங்கிலாந்துக்கும் யுத்தம்.

1813-ல் ஐரி குடா, தேம்ஸ் யுத்தம். இதே ஆண்டில் லாட்ஜன், வெட்ரியா, லீப் யுத்தங்கள் நடைபெற்றன.

1814-ல் நெப்போலியனை அலிப்போ தேசப்பிரஷ்டம் செய்தார்.

1814-ல் லாண்டிலேன் யுத்தம் நடைபெற்றது.

1814-ல் ஆங்கிலேயர் வாஷிங்டன் நகரத்தைத் தீக்கிரையாக்கினர்.

1815-ல் நெப்போலியன் தேசப்பிரஷ்டத்தினின்றும் திரும்பி வந்தார். பின்னர் வாடர்லூ யுத்தம் நடைபெற்றது. இதன் பிறகு கெடீஸா, ஹெல்யானா தீவில் பாதுகாப்புகள் வைக்கப்பட்டன.

1815-ல் மறுமுறையும் பாரிஸில் அமைதியின் கொடி பறக்கத் தொடங்கிற்று.

1815-ல் நியூ ஆர்லியன்ஸ் யுத்தம் நடந்தது. அதில் ஜாக்ஸன் எதிரிகள் வெற்றியடைந்தனர்.

1817-ல் ஜேம்ஸ் மினர்வா அமெரிக்கத் தலைவரானார். அமெரிக்காவுக்குச் சட்ட திட்டங்களைத் தயார் செய்த முதற் தலைவர் இவரே.

1820-ல் ஸ்பெயினில் அரசியல் புரட்சி உண்டாயிற்று.

1821-ல் நெப்போலியன் மரணமடைந்தார்.

1821-ல் யூனான் (கிரேக்க) விடுதலை யுத்தாரம்பம்.

1822-ல் பிராஜீல், போர்ச்சுகலை விட்டுத் தனியாய்விட்டது.

1824-ல் வில்லன் கால்வாய் வெட்ட ஆரம்பிக்கப்பட்டது.

1824-ல் சார்லஸ்டன் பிரான்ஸ் மன்னரானார்.

1824-ல் லார்ட் பேகன் மரணமானார்.

1825-ல் ஜான் எடிசன் அமெரிக்காவின் தலைவராய்த் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

„ முதன் முதலாய் ஒரு கப்பல் அட்லாண்டிக் மகா சமுத்திரத்தைப் பூரணமாய்ச் சுற்றி வந்தது.

1826-ல் நார்வே யுத்தம் நடைபெற்றது.

1826-ல் ஆஸ்டர் ஜாக்ஸன் ஐக்கிய அமெரிக்காவின் தலைவரானார்.

1829-ல் சரியான நீதிபதியொருவர் வேண்டுமெனக் கனடா வாசிகள் பெரிய கிளர்ச்சி செய்தனர்.

1830-ல் மீண்டும் பிரான்ஸில் அரசியல் புரட்சி தலை தூக்கிற்று.

1831-ல் அஸ்டூலிஸ்கா யுத்தம் நடைபெற்றது.

1831-ல் பெல்ஜியம், ஹாலந்து இரண்டும் தனித் தனியே பிரிந்தது.

1832-ல் கனடா தனது ஆட்சியை லார்ட் சபைக்குக் கொடுத்துவிட்டது.

1835-ல் இங்கிலாந்தில் அடிமைகளெல்லாம் உரிமை பெற்றவர்கள் என்னும் சட்டம் நிறைவேறிற்று. 8 லட்சம் அடிமைகளுக்கு இதனால் விடுதலையுண்டாயிற்று.

1835-ல் தந்தி ஆரம்பம்.

1837-ல் கனடாவில் ஒரு பெரிய புரட்சி தலை தூக்கிற்று.

1837-ல் விக்டோரியா அரசியார் இங்கிலாந்தில் சிம்மாசன மேறினார்.

1837-ல் மார்டர் போன் அமெரிக்காவின் தலைவராய்த் தேர்ந்தெடுக்கப் பட்டார்.

1840-ல் விக்டோரியா மகாராணியார், ஆல்பர்ட் ஸெக்ஸ்கோபர்கை மணந்தார்.

1841-ல் ஹாரிஸன் ஐக்ய அமெரிக்காவின் தலைவரானார்.

1842-ல் அமெரிக்காவிலுள்ள நிறை அளவு சட்டங்களில் மாறுதல் உண்டாயிற்று.

1844-ல் அரசாங்கத்தின் அதிகாரிகளெல்லாம் கனடாவினின்றும் மாறி மான்டரியாவுக்குச் சென்று விட்டனர்.

1845-ல் தக்ஸிஸ், ஐக்ய அமெரிக்காவுடன் சேர்ந்து விட்டது.

1845-ல் போலக், ஐக்ய அமெரிக்காவின் தலைவராய் வந்தார்.

1846-ல் அமெரிக்காவுக்கும், மெக்ஸிகோவுக்கும் யுத்தம் ஆரம்பமாயிற்று. இந்த யுத்தம் இதே ஆண்டில் முடிவும் பெற்று விட்டது.

---



# பாவல்பூர் சரிதை — HISTORY OF BHAWALPUR

ஓர் அரசாங்கம் மாற்ற மடைய வேண்டுமாயின் அதற்கு அநேக பல விநாச காரணங்களும் கிரியைகளும் தோன்றுவது வழக்கத்திலிருக்கின்றது. இத்தகைய இறுதி காலம் ஒன்று அப்பாஸியாக்களின் ஆக்ஷியான கிலாபத்துக்கும் தோன்றிற்று. இம்மாபெரும் சக்தி வாய்ந்த அப்பாஸீ கிலாபத்தை ஹாரூன் ரஷீத் போன்ற பரந்த நோக்கமும் விரிந்த அறிவும் படைத்தமாபெரும் மகுடபதிகளெல்லாம் தாங்கி நின்றனர். மேலும் பராமிகர் போன்ற வம்சபரம்பரையைச் சேர்ந்த வீரம் செறிந்த தீரர்களெல்லாமும் கூட அப்பாஸீ கிலாபத்துக்கு அதிக ஆதரவாய் ஒவ்வொரு சமயமும் விளங்கா நின்றனர். இம்மாபெரும் சக்தி வாய்ந்த அரசாங்கத்தை ஆண்ட தனவந்தர்களெல்லாம் சுயநலக்காரர்களாய்அமைந்தனர். ஊழியர்களும் காரியஸ்தர்களும் இலஞ்ச உருவங்களாய் மாறினர். இதன் குடி படைகளான பிரஜைகளோவெனில் அதிக பலஹீன முற்றவர்களாய் மாற்றப்பட்டனர். இவர்களுக்கு அடிமைகளாகவும் கூலியாட்களாகவும் அமைந்திருந்த துருக்கியர் அதிக பராக்கிரமும், சக்தியும், வன்மையும் பெற்றவர்களாய் எழுந்து நின்றனர். அப்பாஸீ கிலாபத்திற்குப் பேராபத்தாய் இது வந்து முடிந்தது.

ஹிஜ்ரீ ஏழாம் நூற்றாண்டின் மத்தியில் அப்பாஸீ அரசாங்கத்தின் மக்களே மிகவும் குறைவாய்க் காணப்பட்டதுடன் அதிக பலஹீனமுள்ளவர்களாகவுமே சமைந்து நின்றனர். இதன் பயனாய் கலீபா அஹ்மத் அப்துல்லாஹில் முஸ்தஸிம் பில்லாஹ் என்பவர் அப்பாஸீ வம்சத்தின் 36வது கலீபாவாய் ஆசனமமர்ந்திருந்தார். இவர் “பக்தாத்” அரசாங்கத்தின் கிரீடாதிபதியாய் பெயரளவிலேயே இருந்து வந்தாரெனலாம். உண்மையில் தாத்தாரிகளுடைய புரட்சியின் காரணமாய் பாவஸீ அரசாக்ஷியானது பக்தாதில் அதுசமயம் அஸ்தமித்துக்கொண்டிருந்த தென்றே கூறிவிடலாம் இதே சமயம் கலீபா அபுல்காஸிம் தாஹிர் பில்லாஹ் என்பவர் பக்தாதைத் துறந்து மிஸ்ர் (எகிப்து) போய்ச் சேர்ந்தார். அவண் அவருக்கு அதிக மரியாதைகளெல்லாம் வரவேற்கு முகத்தான் கிட்டிற்று

இங்ஙனமே மீண்டும் ஒரு நூற்றாண்டுக்குப் பின் இதே வம்சத்தில் தோன்றிய கலீபா சுல்தான் அஹ்மத் II என்பவர் அதி பிரபல்யமடைந்த கலீபாவாய்த் தோன்றினார். இவர்தான் இந்தியாவுக்கும் வந்தவர். இவரே இதுசமயம் பாவல்பூர் எனும் நாமத்தைக்கொண்டு விளங்கி நிற்கும் இந்திய எல்லைப் புறத்தில் தன்னுடைய ஞாபகார்த்தத்தை அஸ்திவாரமாய் அமைத்து, பாவல்பூரை உண்டு பண்ணினார். இந்த ஸுல்தான் அஹ்மத் II ஹிஜ்ரீ 693-ல் இந்தியாவின் எல்லைப் புறமான சிந்துக்கு வந்து சேர்ந்தார். இதே இடத்தில் தான் வாசஸ்தலத்தையும் ஸ்திரமாய் அமைத்துக் கொண்டார். இவர் வருவதற்கு முன்னேயே இங்கு வாசம் புரிந்து வந்த அரபி முஸ்லிம்கள், அப்பாஸீ வம்சத்தைச் சேர்ந்த இவர்பால் ராஜவிசுவாசப்பிரமாணம் செய்து

கொண்டனர். எனவே, இங்ஙனம் சிந்து பிரதேசத்தில் அப்பாஸீ அரசாங்கத்தின் அஸ்திபாரம் போடப்பட்டு விட்டது.

ஹிஜ்ரீ 1140 (கி. பி. 1747)ல் பைரோஜ்கான் அப்பாஸீயின் நான்காம் தலை முறையில் சாதிக் முஹம்மத்கான் I என்பவர் பாவல்பூரின் அரசராய் அமைந்தார். இவர் சிம்மாசனமடைந்த இரண்டாம் ஆண்டில் முல்தான் அரசாங்கத்தாரிடமிருந்து சௌத்ரீ என்னும் பாகத்தை ஜாகீராய் சாஸனம் பெற்றார். மேலும் ஹிஜ்ரீ 1142ல் சௌத்ரீ என்னும் பாகத்துக்கு மூன்று மைலுக்குஅப்பால் ஒரு கிராமத்தை அமைத்து 'அல்லாஹ் ஆபாத்' என்று அதற்கு நாமம் சூட்டினார். இவர்தான் சமஸ்தானத்தின் ஆதி நவ்வாப் ஆவார். பின்னர் முறையே பாவல்கான் I, நவ்வாப் முஹம்மத் முபாரக்கான், முஹம்மத் பாவல்கான் II, நவ்வாப் சாதிக் முஹம்மத்கான் II என்பவர்கள் சமஸ்தான அதிபதிகளாய் வந்தனர். இவர்களுக்குப் பின் ரஹீம்யார்கான் (பரவல்கான் III) சமஸ்தானாதிபதியாய் வந்தபோது, பாவல்பூர் அரசாங்கத்துக்கும் ஈஸ்ட் இந்தியா (கிழக்கிந்தியா) கம்பெனிக்கு மிடையே நல்ல முறையில் சமாதான உடன்படிக்கையொன்று ஏற்பட்டது. இவருக்குப் பின் நவ்வாப் சஆதத்யார்கான், நவ்வாப் ஹாஜீகான், நவ்வாப் ரஹீம்கான், நவ்வாப் சாதிக் முஹம்மத்கான், நவ்வாப் முஹம்மத் பாவல்கான் என்பவர்கள் முறையேஅரசர்களாய் அமர்ந்ததன் பின், தற்சமயம் நவ்வாப் சர் ஹாஜி முஹம்மத் சாதிக்கான் என்பவர் சிம்மாசனமமர்ந்து சீரிய முறையில் பிரஜா பரிபாலனம் செய்து வருகின்றார்.

இதுகாறும் பாவல்பூர் அரசாங்க நிருவாகம் பண்டையக்கால வழக்கப் பிரகாரமே நடந்து வந்தது. ஆனால் தற்சமயம் சமஸ்தானாதிபதியாய் தோன்றி நிற்கும் நவ்வாப் முஹமத் சாதிக்கான் என்பவர், தனது அரசாங்க அதிகாரத்தை ஏற்றுக் கொண்டவுடன் தமது தேச மக்களின் நன்மையையும் க்ஷேமத்தையும் முதன் நோக்கமாய்க் கொண்டு, அதற்கான பல சீர்திருத்தங்களைச் செய்திருக்கிறார். இதன் பயனாய் தேசமெங்கும் அதிக பிரயோஜனங்கள் உண்டாயின. உதாரணமாய் இவர் விவசாயத்திற்காக வென்று தமது தேசத்தில் பல நதிகளைப் புதிதாய்த் தோற்றுவித்தார். கல்வி நிலையை யுன்னி பல சிறிய பெரிய கலாசாலைகளை ஆங்காங்கே நிர்மாணம் பண்ணினார். இத்துடன் நில்லாமல் பிரஜைகளின் சுகாதாரத்தைக் கவனித்து அனேக பல தோட்டங்களையும் பூங்காவனங்களையும் அரிய வைத்திய சாலைகளையும் உண்டு பண்ணினார். இஃதெல்லாவற்றைக் காட்டிலும் தேச நன்மையையும் அதன் பாதுகாப்பையும் முக்கியமாய் மனதில் கொண்டு சாதாரண டாணாக்காரர்களையும் ராணுவ சேவக சிப்பாஹீகளையும் நவீனமுறையில் சீர்திருத்தத்துடன் அமைத்திருக்கிறார். இவர் கலாஞான விஷயத்தில் அதிக பற்றுள்ளவராகவும் ஏழைகள் பால் இரக்கக்குணம் படைத்தவராகவும் தனக்குள்ளேயே பற்பல பாண்டித்தியம் பெற்றவராகவும் விளங்கி நிற்கின்றார். வலியார் என்றும், எளியார் என்றும், ஏழை என்றும், தனவந்தர் என்றும், ஹிந்துவென்றும், முஸ்லிமென்றும் தம் பிரஜைகளுக்குள் எவ்வித பாகுபாட்டையும் இவர் காட்டுகின்றவரா யில்லை. சுருங்கக் கூறின், இவரை ஒரு முறை சந்திப்பவர் பண்டையகால அப்பாஸீ கிலாபத்தின் தோற்றத்தைத் தன் மனதில் கொள்ள வேண்டிவரும் எனக் கூறி முடித்தல் மிகையாகா.

# ஸ்டாலின்கிராட் தற்காப்பின் அற்புதம்

## STALINGUARD STANDS!

### பாதாள அறையில் வேலை செய்யும் கர்மவீரர்கள்

ஸ்டாலின் கிராட் நகரத்தின் தற்காப்பு ஒரு அற்புதமாகத்தானிருக்கிறது. ஒரு சுரங்க அறையிலே பதுங்கிக் கிடக்கும் ஒரு சில ஆட்கள்தான் இந்தஅற்புதத்துக்குக் காரண பூதர்கள் என்கிறார் அதைக் கண்டு வியந்துவிட்டு மாஸ்கோ திரும்பியுள்ள ஒரு ரஷ்யக்கவி. அந்த அமைப்பைப் பற்றி அவருடைய வர்ணனை இதுதான்.

எரிந்துபோய் எலும்புக் கூடு போல் நிற்கும் சில கட்டடங்களுக்கடியிலே தான் இருக்கிறது இந்தப் பாதாள அறை. இதற்குள்ளே தான் இருக்கிறது ஸ்டாலின்கிராட் தற்காப்பை நடத்தும் ஜெனரலின் தலைமைஸ்தானம். இந்த ஜெனரலின் பெயர் இப்போது வெளிவராது. பின்னால்தான் பிரபலமாகும்.

நெருப்புக்குச்சி கூட பற்ற முடியாத அந்த இருட்டறையில், ஏதோ கிடைத்த சாப்பாட்டை அங்கங்கேயே சாப்பிட்டுக் கொண்டு, க்ஷௌரம் செய்து கொள்ளக்கூட நேரமில்லாமல் இரு மாத காலமாய் வேலை செய்து வருகிறார்கள் அதிகாரிகள். இங்கிருந்து முன்னணித் தலைவருக்கு டெலிபோன் செய்தி பறக்கிறது.

### கட்டடத்துக்கே வெடி

ஸ்டாலின் கிராட் முனையின் தென்பகுதியில்தான் சென்ற வாரம் ஜெர்மானியர் வெகு மூர்த்தன்னியமாகத் தாக்கினார்கள். பாய்ச்சல் விமானங்களையும் பீரங்கிகளையும், 200 டாங்கிகளையும் மோட்டார்ப் படைகளையும் கொண்டு தாக்கியதில் 42 டாங்கிகளை இழந்தபின் அவர்கள் பக்கவாட்டத்தில் நுழையலானார்கள். ஒரு உயரமான கட்டடத்தில் தான் மிகவும் கடுமையாகப் போராட்டம் நடந்தது. ஒவ்வொரு மாடியையும் ஜெர்மானியர் கைப்பற்றிக் கொண்டனர். அப்படியும் ரஷ்யர் புகுந்து வாயிலுக்கு வாயில் போர் புரிந்து கொண்டே சென்றனர். பல அறைகள் பல தடவைகள் கைமாறின. அப்படியும் ஜெர்மானியரை வெளியேற்ற முடியாமற் போகவே, ஐந்து பேர் ஆளுக்கு 25 பௌண்டு வெடிமருந்துடன் வெளியேறிக் கட்டடத்துக்கு வர்த்தி வைத்தனர். ஜெர்மானியர் அப்படியேமடிந்து மண்ணாயினர். அதற்குக் காரணராயிருந்த அந்த ஐவரும் தப்பியிருப்பாரென்று தோன்றவில்லை.

### தொழிற்சாலை விட்டு டாங்கிகளில் பாய்ந்தனர்

இப்போதுஸ்டாலின்கிராடிலுள்ள தொழிற்சாலை ஒன்றைப்பார்ப்போம் இங்குள்ள தெழிலாளர்கள் இடையிடையில் போர் புரிந்து விட்டுத் தம் வேலையில் வந்து இறங்கி விடுகிறார்கள். சென்ற வாரம் ஜெர்மானியர் இதற்குள் புகுந்தனர். உடனே அங்கிருந்த தொழிலாளர்கள் தாங்கள் மராம்மத் செய்து கொண்டிருந்த டாங்கிகளிலேயே ஏறிக் கொண்டு வெளியே கிளம்பிவிட்டார்கள். ரஷ்யப் புரட்சியின்போது போராடியது போலவே இப்போதும் போராடலாயினர். மனைவியாரும் சிறுபெண்களுங்கூட போர் முனைக்கு வந்து விட்டார்கள்.

# எப்பாத்திரங்களில் சமைக்க வேண்டும்?

## IN WHICH VESSELS SHOULD WE COOK?

நம் வீடுகளில், ஆகாரங்களைத் தயாரிப்பதற்கும், வைப்பதற்கும், மண் பாத்திரங்கள், கல் சட்டிகள் பீங்கான்கள், எனமல் பாத்திரங்கள் கண்ணாடிப் பாத்திரங்கள், உலோகப் பாத்திரங்கள் முதலியவற்றை நாம் உபயோகிக்கிறோம். ஆனால் எந்தப் பாத்திரத்தை உபயோகிப்பது உணவுக்கு உருசியை யுண்டாக்கும், உடம்புக்கு ஊட்டத்தைக் கொடுக்கும் என்று கவனிப்பதேயில்லை. இம் முக்கியமான விஷயத்தில் மிக அலட்சியமா யிருப்பதால் தான் அனேக வியாதிகள் தோன்றுகின்றன. 100 வயது இருக்கக் கூடியவர்கள் 50, 60 வயதில் அந்தியக் காலத்தை அடைந்து விடுகின்றனர். அதுவும் பல நோய்களை பல நாட்களோ, மாதங்களோ அனுபவித்தே மரணமடைகின்றனர்.

மண் பாத்திரங்கள் ஆரோக்கியத்துக்கு மிக்க ஏற்றதாயிருக்கிறது. அவைகளை உபயோகப்படுத்துதற்கு முன்பு நன்றாகச் சுத்தம் செய்து நல்ல காற்றும் சூரிய வெளிச்சமும் படும்படியாக வைக்க வேண்டும். இவை விலை குறைவாயுமுள்ளன. இவைகளை உடையாமல் பார்த்துக் கொள்வதுதான் ஒரு சிறு கஷ்டம். உலோகப் பாத்திரமொன்று ஒன்றிரண்டுரூபாய்க்கு வாங்கி, மாதமொரு முறையோ இரு முறையோ அதற்கு ஈயம் பூசிக் கொண்டு உடம்பையும் கெடுத்துக் கொள்வதைவிட; மூன்று மாதத்துக் கொருதடவை உடைந்து உடைந்து போனாலும் மீண்டும் மீண்டும் ஒரு மட்பாத்திரம் வாங்கினாலும் உலோகப் பாத்திரத்துக்கு போடும் இரண்டுரூபாய்க்கு இரண்டு மூன்று வருடத்துக்கு மட்பாத்திரங்களை வாங்கலாம். உடம்புக்கு ஆரோக்யமாயிருப்பது இலாபமாயிருக்கும். மட்பாத்திரம் வாங்குதற்கு அதிக விலை வேண்டுமே யென்ற கஷ்டமில்லை.

பீங்கான் பாத்திரங்கள் அடுப்பில் வைப்பதற்கு ஏற்றவையல்ல. எனமல் பாத்திரங்களில் விலையுயர்ந்த ரகங்களைத்தான் உபயோகப் படுத்த வேண்டும். அந்தப் பாத்திரங்களிலும் மழ மழ வென்று இருக்கும் வெளிப் பாகங்களில் ஒரு விதமான விஷ பதார்த்தம் இருப்பதால், அவைகள் பல நோய்களை உண்டாக்கின்றன.

கண்ணாடிப் பாத்திரங்கள் நமக்குத் தகுந்தவை யல்ல.

கூடிய வரையில் உலோகப் பாத்திரங்கள் உபயோகிப்பதைக் குறைக்க வேண்டும். உலோகங்களில் காற்றும் தண்ணீரும் பட்டால் அவற்றின் சிறு அணுக்கள் வேறு சில வஸ்துக்களாக மாறுகின்றன. அவைகள் ஆகாரத்துடன் சுலபமாகக் கலந்து ஆகாரத்தைக் கெடுக்கின்றன. இது தவிர சமையல் செய்யும்போது இந்த உலோகங்களே, அவைகளுக்குள்ளிருக்கும் ஆகாரத்துடன் கலந்து தேகாரோக்யத்தைக் குலைக்கின்றன. இருந்தாலும் உலோகப் பாத்திரங்களைப் பளபள வென்று தேய்த்து உபயோகித்தால் அதிக கெடுதியில்லை. சமையலில் அடுப்பில் வைப்பதற்கு முன் மண்ணையோ, கஞ்சிப் பசையையோ பூசுவதும், முதலில் புளி தடவிப் பிறகு சாம்பலால் தேய்த்துச் சுத்தம் செய்வதுமான தென்னிந்தியருடைய வழக்கங்கள் விஞ்ஞான சாஸ்திரமார்க்கமானவைகளே. அந்தப் பழக்கங்களை அனுஷ்டிக்க வேண்டும்.

ஈயப்பாத்திரங்கள், எல்லா உலோகப் பாத்திரங்களைக் காட்டிலும் மிகவும் கெடுதல். இவைகளை உபயோகிக்கவே கூடாது. இவை வெள்ளீயத்தினால் செய்யப்பட்டது; பரவாயில்லை யென்று சிலர் கூறுவர். அப்படி யிருந்த போதிலும் அவற்றிலிருக்கும் ஈய உப்புக்கள் விஷப் பதார்த்தங்களே. ஈயப் பாத்திரங்களில் செய்த ரசம், சாம்பார் முதலியன சிறிது ருசியாயிருந்த போதிலும், அவைகளுடன் சேர்ந்த ஈய உப்புக்கள் உடம்புக்குக் கெடுதலே. அவைகள் கொஞ்சம் கொஞ்சமாக நமது தேகத்தினுள் சேர்ந்து கடைசியில் அவையவங்களின் சில பாகங்களில் தங்கி, இரத்தமின்மை மலச்சிக்கல், வயிற்றுவலி முதலிய வியாதிகளை உண்டாக்குகின்றன. செம்பு, பித்தளை, வெள்ளீயப் பாத்திரங்களை மிகவும் சுத்தமாக வைத்துக்கொண்டால், தண்ணீர் வைப்பதற்கு உபயோகிக்கலாம்.

செம்பும், பித்தளையும் சமையலுக்கு ஏற்றதல்ல. செம்பில் பால் காய்ச்சினால் பாலின் ருசி கெட்டு 'ஏ' ஜீவசத்துப் பொருள் சிறிதளவு குறைகிறது. சாதம் சமைக்க உபயோகிக்கும் பித்தளைப் பாத்திரங்களுக்கு வெள்ளீயப் பூச்சுப் பூச வேண்டும். அந்தப் பூச்சு நன்றாகக் குலைந்து போவதற்குள் அடிக்கடியும் பூசவேண்டும். அப்படிப் பூசாவிடில், பூச்சுப் போய்விட்ட இடங்களிலிருந்து உலோகத்திலுள்ள விஷம் ஆகாரத்துடன் கலந்து கெடுதியை விளைவிக்கின்றது. கலாய் பூசுகிறவர்கள், தங்கள் செலவைக் குறைப்பதற்காக வெள்ளீயத்துடன் விஷக்குணமுள்ள காரீயத்தையோ, துத்தநாகத்தையோ அல்லது இரண்டையும் கலந்தோ உபயோகிக்கிறார்கள், ஆகவே இவர்களை அவர்களிடமுள்ள ஈயத்தை உபயோகப்படுத்த விடக்கூடாது. நாமே வெள்ளீயம் வாங்கிக் கொடுத்துப் பூசச் செய்ய வேண்டும்.

தண்ணீரையும் பாலையும் காய்ச்சுவதற்கு அலுமீனியப் பாத்திரங்களை வேண்டுமாயின் உபயோகிக்கலாம். சாதாரணமாக எல்லாவற்றைக் காட்டிலும் அலுமீனியம் தான் குறைந்த விஷகுண முள்ளது.

---

ஸ்திரிகள் வெடிமருந்தும் உணவும் கொண்டு வந்தார்கள். சிறுமிகள் குழிகளில் குதித்துக் காயம்பட்டவர்களுக்குச் சிகித்சை செய்து தொழிற்சாலைக்கு இட்டுச் சென்றனர். இப்படிப் போராடிக் கடைசியில் காவல் வீரர் வந்தபின் தொழிற்சாலைக்குத் திரும்பி வேலையில் ஆழ்ந்தனர்.

### காலி நகரம்

வால்கா நதி மீது இப்போது சந்திரனைக் காணமுடியாது. வான மண்டலத்தை ஒரே புகை கப்பிக் கிடக்கிறது. நதியிலே வீரர்களையும் வெடி மருந்து, குண்டு முதலியவைகளையும் உணவையும் பீரங்கிகளையும் படகுகள் கொண்டு வந்து சேர்த்த வண்ணமாயிருக்கின்றன. கூடவே முதலுதவிக்காகச் சிறு பெண்களும் வருகிறார்கள். காயமுண்டவர்களெல்லாம் ஆஸ்பத்திரிக்கு அழைத்துச் செல்லப்படுகிறார்கள். ஸ்டாலின் கிராடை விட்டுப் போகையில் பல பெண்களும் குழந்தைகளும் மாண்டார்கள். பற்றியெரியும் அந்த நகரில் இப்போது ஆளில்லை. இன்னும் தரை மட்டமாகாது நிற்கும் வீடுகளெல்லாம் காலியாய்த்தான் கிடக்கின்றன.

# மாதவனின் மறுமணம் MADHAVAN'S RE-MARRIAGE

By அ. பீ. மு. அலாஉத்தீன்

## VIII

மாதவன் வசித்து வரும் கந்த நல்லூருக்கு வடக்கே சுமார் ஒரு மைல் தூரத்தில் ஏரி ஒன்றுண்டு: தண்ணீர் தேக்கத்தால் சமுத்திரம் போல காணப்பட்டது. எதிர் கரையில் மலைத்தொடர்—வெண்மேகத் திரையுடன் கலந்து காட்சி தந்தது. ஏரியின் இரு கரைகளிலும், கண்ணுக்கெட்டிய தூரம் வரை விருக்ஷங்களின் பசுமை நிறத் தோற்றம் பார்க்கப் பரவசமூட்டின. அங்கே அழகிய நந்தவனங்கள் ஏற்படுத்தி—ஜனங்களமர்ந்து இயற்கை வனப்புகளைப் பருக சிமிண்டு மேடைகள் போடப் பட்டிருந்தன. அந்த மேடை ஒன்றில் மாதவன் சிந்தித்த வண்ணம் உட்கார்ந் திருந்தான். அவனருகே பெரிய பெரிய மலர்களைச் சுமந்த செடிகள் பல, அசைந்தாடி மாதவனை மகிழ்விக்க முயன்று கொண்டிருந்தன.

அப்பொழுது அங்கே அழகிய நாரி மணிகள் சிலர் சிரித்துப் பேசிக்கொண்டு, மாதவனமர்ந்திருந்த மேடைக்குப் பக்கத்திலுள்ள மேடையில் வந்து உட்கார்ந்தார்கள். மாதவனை அவர்கள் கவனிக்க வில்லை. அவர்களின் சிரிப்பின் எதிரொலி மாதவன் செவிகளைத் துளைத்தன. என்றாலும் மாதவனின் சிந்தனை கலைய வில்லை. ஆனால் அந்த பெண்களின் சம்பாஷணையில் கோமதி என்ற பெயர் அடிக்கடி உச்சரிக்கப் படுவதைக் கண்டு மாதவனின் கவனம் அங்கே சென்றது.

"பாவம்! அவள் எவ்வளவு வாடி விட்டாள் பார்த்தாயா?"

"ஆம்! என்ன செய்வாள்? இரு குழந்தைகளை வைத்துக் கொண்டு சம்ரக்ஷிக்க வேண்டாமா? அதிலும் உடல் நலம் சரியாயில்லை."

"இப்பொழுது உடம்பெல்லாம் சொஸ்தமாகி விட்டது. குழந்தைகளென்ன? குழந்தைகள் தான் அவளுக்குத் துணை: தங்கம் வீட்டு வேலைகள் முழுதும் கவனித்துக் கொண்டு விடுகிறாள். சின்னவளாயிருந்தாலும் என்ன சூட்டிகை? அதனாலெல்லாம் கோமதி வாடி விடவில்லை. ஏதோ அவள் மனசில் கவலை குடி கொண்டிருக்கிறது."

"என்ன அது?"

"வனசாட்சியை தெரியுமோ இல்லையோ? ஜமீன்தாரரின் காரியஸ்தர் மகள்:"

"செக்கச் செவேறென்ட உடம்பு: துரும்பாக இளைத்த சரீரம்: அவளையாத் தெரியாது?"

இதைக் கேட்ட எல்லாப் பெண்களும் கொல்லென்று சிரித்தார்கள்.

"அவள் நமது கோமதியை இவ்வூரை விட்டுப் போகும்படி தன் புறுத்துகின்றாளாம். பாவம்! அப்பா அம்மா இல்லாத பெண்; எங்கே போவாள்?"

"கோமதியைப் போகச் சொல்ல அவளுக்கு என்ன வந்து விட்டது?"

"ஜமீன்தார் தான் அப்படி போகத் தூண்டுகிறாராம்."

"இதென்ன விந்தை? ஜமீன்தாரா சொல்லுகின்றார்? அவள் எந்த வம்புக்கும் போகாத சாந்தமான பெண்ணாச்சே! ஒரு அனாதைப் பெண்ணை ஏன் இப்படி ஹிம்சிக்க வேண்டும்?



இதில் ஏதாகிலும் சூழ்ச்சி இருக்கலாமோ?"

"சூழ்ச்சியாவது? கீழ்ச்சியாவது? அவளுடைய சகுனமே அப்படித்தான்: ஒரு வருஷம் சந்தோஷமாக இருந்தாளென்னு இல்லை: அவளுடைய அப்பா குடிகாரர்: அவர் கோமதியையும் தங்கத்தையும் படுத்திய பாடு கொஞ்சநஞ்சமா? அவளுக்கு அவர் இருந்தும் கஷ்டம் அவர் இறந்தும் கஷ்டம்: அவர் இறக்கும் போது சொத்துக்களொன்றும் விட்டுப் போக வில்லை. அவளுடைய தாய் குழந்தைகளின் கஷ்டத்தைக் காணச் சகியாமல் சென்று விட்டாள்: அனாதைகளைக் கடவுள் தான் காப்பாற்ற வேண்டும்:"

இந்த சம்பாஷணைகளில் கலந்து கொள்ளாது உட்கார்ந் திருந்த, தேவகி என்ற ஒரு பெண்: "கோமதி ஜுரமாயிருக்கும் போது எத்தனையோ நாள் பட்டினியாக இருந் திருக்கிறாள். அப்போ அவளுடைய தங்கை தங்கமும், கோமுவும் சாத மின்றி பசியால் துடித்தார்கள். இதை சகிக்காமல் தங்கம் யார் யார் வீட்டிலோ சென்று கொஞ்சம் சாதம் வாங்கி வந்து தனது தம்பிக்கும் கொடுத்து தானும் தின்டாளாம். அப்போது எங்களுக்கு இதைப்பற்றிச் சேதிக் கிடைச்சுது: என் நாத்தனார் உடனே, கோமதியின் வீட்டுக்கு ஓடினாள். அங்கே வனசாட்சி கோமதியிடம் ஏதோ கடிந்து சொல்லிக் கொண்டிருந்தாளாம். அவள் வீட்டை விட்டுப் போன பிறகு என் நாத்தினார் கோமதியைக் கண்டு, இனி உன் தங்கையை சாதம் வாங்கும்படி வெளியே அனுப்பக் கூடாது; எங்கள் வீட்டிலிருந்து எல்லாச் சாமானும் அனுப்பி வைக்கிறோம் என்று சொல்லி விட்டு வந்தாள். அதே போல சுமார் பத்து நாளாக அரிசி காய் கறிகளெல்லாம் அனுப்பிச்சு வந்தோம். இப்போ இரண்டு நாளாக அவைகளை எடுத்துக் கொள்ள மறுக்கிறாள்."

"எதற்காக?"

"அவளுடைய உடம்பு சொஸ்தமாய் விட்டதனால், டிவிஷன் சொல்லிக்கிறதிலே, வருமானம் வருதோ இல்லையோ? அதே போது மென்று விட்டாள்."

அப்பொழுது தங்கம் தனது தம்பியை அழைத்துக்கொண்டு அங்கே வந்தாள். அவ்விரு குழந்தைகளையும் கண்ட இள யுவதிகளின் சம்பாஷணை நின்று விட்டது. தேவகி, சோமுவைத் தன தருகே கூப்பிட்டு இடுப்பில் தூக்கிக் கொண்டு "நூறு வயசு, எங்கேடா வந்தே" என்று கூறிக் கொஞ்சினாள்.

"என் அக்கா வர்ரா...க்...க் ...க்...க்" என்று கை கொட்டிக் கொண்டு சிரித்தான். கோமதி அங்கே வந்து கொண்டிருந்தாள். அவள் எப்பொழுதும் போல ஆபரண மின்றி ஒரு சேலையை அணிந்து கொண்டிருந்தாள். பழைய தோர் பாடியும் அவளுடைய உடம்பை மறைத்துக் கொண்டிருந்தது. அவளுடைய அழகு அதனாலேயே எல்லாம் குறைந்து விட வில்லை. அந்த ஏரிக் கரையில் அவளுடைய அழகு மேலும் பிரகாசித்தது.

முதலில் தங்கத்தையும் சோமுவையும் கண்ட மாதவன், கோமதியைக் கண்டு ஆச்சரிய மடைந்தான். கோமதியின் அழகு அவனுள்ளத்தில் பதிந்தது; இம்மாதிரியான ஒரு பெண் இவ்வுலகத்தில் இருக்கிறாளென்பது அவனுக்கு விந்தையாக இருந்தது. பிரம்மா தனது முழுத் திறமையினால் சிருஷ்டித் திருக்க

வேண்டும். சித்திர வல்லுனர்களின் கர்ப்பனையின் தேவியாக அவனுக்குத் தோற்ற மளித்தாள் கோமதி."

யுவதிகள் பேசிக் கொண்டதை செவி ஏற்றிருந்த மாதவனுக்குக் கோமதியின் நிலைமை ஓரளவு தெரிய முடிந்த தென்றாலும் இவ்வூரை விட்டு கோமதியைத் துரத்த வனசாட்சி முயலுவதின் அர்த்த மென்ன? என்று யோசித்தான். நான் இதில் தூண்டு கோலாக இருப்பதாகவும் கூறி இருக்கிறாள். இதென்ன அதிசயம்? நான் கனவிலும் சிந்திக்காத விஷயங்கள் ஜனங்களிடம் பரப்பப்படுகிறதே: வனசாட்சி செய்ய முயலும் சூச்சியில் ஒன்றும் விளங்க வில்லையே! அவளிடம் கேட்பதினால் உண்மை விளங்க முடியுமா? வனசாட்சியின் மனதில் தப்பெண்ணங்கள் உதித்திருக்க வேண்டும். கோமதியைக் கண்ட எந்த யுவனும் மணக்க விரும்புவான். அத்தகைய பேரழகு பெற்றிருக்கும் அவளை வனசாட்சி சந்தேகித்ததில் ஏதோ உண்மை தானிருக்கிறது. நான் எங்கே, கோமதியை மணந்து கொண்டு விடுவேனோ என்ற சந்தேகம் வனசாட்சியின் உள்ளத்தில் ஏற்பட்டிருக்க வேண்டும். அப்படி நான் ஒரு பெண்ணை மணந்து சந்தோஷமடைய அவள் ஒரு தடையாக வருவதின் காரண மென்ன? வனசாட்சியை நான் மணந்து கொள்ள இருப்பதாக, அவள் தனது மனதில் கர்ப்பனை செய்துக் கொண்டிருக்கிறாள். கோமதி அந்தக் கர்ப்பனைக் கோட்டையை எங்கே தகர்த்து விடுகிறாளோ என்ற பயம் அவளுக்கு: இந்த விசித்திர எண்ணங்களுக்கு நான் என்ன செய்யலாம்?

சிந்தனையுடன் உட்கார்ந்திருந்த மாதவனைக் கண்ட தங்கம் "மாமா!" என்றாள்: மாதவன் தங்கத்தைப் பார்த்து பல நாட்களாய் விட்டது. அதனால் அவன் மனம் தங்கத்தைக் காண விழைந்து கொண்டிருந்தது. இன்று ஏரிக் கரையில் அவனுள்ளத்தில் கொந்தளிப்பும் மகிழ்ச்சியும் கலந்துள்ள போது தங்கத்தின் புன்னகை எல்லாச் சிந்தனையையும் மூழ்கடித்தது. அவன் மனம் என்று மில்லா ஆனந்தத்தில் சுழலத் துடங்கிற்று. இத்தகைய எழுச்சி எதனால் ஏற்பட்டது?

"தங்கம், நீ யாருடன் வந்தாய்?" என்றான் மாதவன்.

இதைக் கேட்ட யுவதிகள், மாதவன் உட்கார்ந்திருப்பதை உணர்ந்து கொண்டார்கள். மாதவனை அங்கிருந்த எல்லாருக்கும் நன்றாகத் தெரியும். அந்த யுவதிகளின் லெஜ்ஜை அவர்களைப் பிடுங்கித் தின்றன. அவர்கள், தங்களின் சம்பாஷணையை மாதவன் கவனித் திருப்பானோ? என்று சிந்திக்கும்போது ஒவ்வொரு யுவதியின் உள்ளத்திலும் பயம் பற்றிக் கொண்டது.

## IX

"அதோ என் அக்காள்: என் தம்பி சோமு: நாங்க எல்லாருமே தான் வந்திருக்கிறோம். நீங்கள் மட்டுமே தானா இங்கே வந்தீர்கள்?"

"என்ன செய்றது தங்கம்?: நீந்தான் என்னைப் பார்க்க வராதிருந்துட்டாயே! நான் தனியா இருக்கிறேனோ இல்லையோ? நீ என்னோடு இருந்துட்டா, என்ன?"

சிறுமி தங்கம் சிந்தித்தாள்.

"என்ன யோசனை? என்னிடமிருக்க இவ்வளவு பயமா? நான் அடிக்கவே மாட்டேன். அதோ மோட்டார். அதில் ஜோராப் போகலாம். குதிரை, மாடு, குருவி, எல்லாமிருக்கு: அதெல்லாம் உனக்கே தந்துடுரேன். நித்தம் அல்வா ஜிலே பிட்டாப் பழம், எல்லாம் சாப்பிடலாம். என்ன யோசிக்கிறே:"

"யோசிக்கல மாமா: என் அக்காளுக்கு உதவி செய்ய யாரு இருக்கிறா?"

மாதவனுக்கு ஒரு சிந்தனை பளிச் சென்று பாய்ந்தது. ஆனால் பழய சிந்தனைத் தோன்றி அதை விழுங்கி விட்டது.

"உன் அக்காளிடம் கேட்கட்டுமா?"

"நீங்கள் தானே ஒரு அம்மாமியை அனுப்பிக்சு, நாங்க இந்த ஊரிலிருக்க கூடாதென்னு சொல்லி அனுப்பினீர்களே! அந்த அம்மாமி என் அக்காளிடம் நேற்று ரொம்ப கடிந்து கொண்டாள். நாங்கள் இந்த ஊரிலிருக்கப்படாதாம். எங்காகிலும் சென்றுடனுமாம். நாங்க எங்கே போறது? உங்களை நான் ரொம்ப நல்ல மாமா என்று நினைச்சுண்டிருந்தேன் ஆனா............"

"ஆனா...... என்றால் என்ன?"

"நீங்கள் தான் அப்படிச் சொன்னீர்களாம்."

"நானொன்றும் அப்படிச் சொல்லவில்லை தங்கம்; உன்னை நான் என் வீட்டில் என்னோடு வைத்துக் கொள்ள விரும்பிச் சொல்லி அனுப்பிச்சேன். அந்த அம்மாமி உங்களிடம் என்ன என்னமோ சொல்லி பயமுறுத்தி இருக்கிறாள். அந்த அம்மாமியிடம் நான் கேட்கிறேன்" என்றான்.

அங்கே அழகிய குழந்தை ஒன்று அக்கா...அக்கா... என்று கூப்பிட்டுக்கொண்டு வந்தது. அதனுடைய நடையும் மழலை மொழியும் மாதவனுக்கு ஆனந்தத்தை அளித்தது. மாதவன் தன்னருகே அழைத்து, "உன் பெயரென்ன?" என்று கேட்டான்.

"சோமு....டிர்ர்ர்...பை..." என்றது குழந்தை: மாதவன் குழந்தையைத் தூக்கிக்கொண்டு கொஞ்சிய வண்ணம் "நீ எதிர்காலத்தில் உன்

கம் போற்றும் சிறந்த யுவனாக வாழ்வாய்: நல்ல அறிவை உனக்குக் கடவுள் கொடுத்திருக்கிறார்" என்றான்.

குழந்தை, மாதவன் கூறுவதை விளங்கிக் கொள்ளாது தனது கையில் வைத்துக்கொண்டிருந்த மலரொன்றைத் திருகிக்கொண்டு "அக்கா அடிப்பா, போரேன்," என்றது.

"அடிக்க மாட்டா: பயப்படாதே: நீ நல்ல சமத்துதானே:"

ஆமாம் என்று தலையசைத்த சோமு, தனது அக்காள் அருகே வந்து கொண்டிருப்பதைக் கண்டு கை கொட்டிச் சிரித்தான்.

"என்ன சோமு! ஊரா வீட்டு மாமாவிடமெல்லாம் உறவு கொண்டாடுகிறே" என்று கூறிக்கொண்டே மாதவனிருக்குமிடம் வந்தாள்.

"தாங்கள் யாரென்று எனக்குத் தெரியவில்லையே; என் குழந்தைகளிடம் தங்களுக்கு அவ்வளவு பிரியமா?" என்று கோமதி அழகிய ஒரு புன்னகையுடன் தங்கத்தையும் அழைத்துப்போக முயன்றாள். அப்பொழுது தங்கம், "அந்த மாமா யார் தெரியுமா?......எனக்குத்தீபாவளி அன்னிக்கு நிறைய பலகாரம் கொடுத்தாரே அந்த மாமா. நம்பளை இந்த ஊரை விட்டுப் போகும்படி சொல்லுர மாமாவும் இந்த மாமாத்தான்."

"உனது பெயர்தான் கோமதியென்று நினைக்கிறேன். இந்தக் குழந்தைகளிடம் எனது பாசம் அதிகரித்து இருக்கிறது. அதை நீ தவறாகக்கருத இடமில்லை. உன்னிடம் வனசாட்சி என்ன சொன்னாள்? தயவு செய்து என்னிடம் விபரிக்க முடியுமா?"

"தங்கம் உங்களிடம் தாறுமாறாக ஏதோ உளறி இருக்கிறாள்போலிருக்கிறது. அதெல்லாம் ஒன்றுமில்லை" என்று கூறிய கோமதி சேதியை விழுங்கினாள்.

"உன்னையும் உன் தங்கை தம்பியையும் இவ்வூரை விட்டுப் போகும்படி அவள் ஏன் கூறினாள்?"

"நீங்கள் சொன்னதாகச் சொன்னாள். அது வனசாட்சியின் சதியாக இருக்குமென்றே அதைப் பொருட் படுத்தாதிருந்து விட்டேன். அதைப்பற்றி இப்பொழுது ஒன்றுமில்லை. நாழியாகி விட்டது, மன்னியுங்கள், வருகிறேன்" என்று புறப்பட்டாள்.

மாதவன் அவளுடைய அழகிய வதனத்தைக் கண்டு ஆனந்தித்தவனாகத் தலையை மட்டும் அசைத்தான். அவனுடைய பார்வையின் பிரகாசத்தைத் தாங்காத கோமதி நாணி, தலைகுனிந்த வண்ணம் குழந்தைகளை அழைத்துக் கொண்டு போனாள்.

மாதவனுடைய மனம் ஏதோ ஒரு சக்தியில் கட்டுண்டு ஊசலாடியது. கடந்த மூன்று ஆண்டுகளிலும் இம்மாதிரி ஒரு க்ஷணங்கூட இருந்ததில்லை. ஒரே இருண்ட உலகில் ஒரு கதிரவன் உதயமானதுபோல் இருந்தது. அவனுக்கு இன்னும் அவனுள்ளத்தில் அணைகடந்த எண்ணங்கள் புரண்டு கொண்டிருந்தன.



# திவ்ய நோன்பு Sacred Fasting

(By MOULANA ABUL AALA)

முஸ்லிம் சோதரீர்! இஸ்லாத்தின் முக்கிய ஐந்து கடமைகளுள் நோன்பென்பதும் ஒன்றாகும். நோன்பென்பது, காலையிலிருந்து மாலைவரை மனிதன் உண்ணாமலும் பருகாமலும் வீடு கூடாமலிருப்பதுமாகும். தொழுகையைப்போல் நோன்பென்னும் இவ்வணக்க ஏற்பாடும், ஆதிமுதல் தோன்றி வந்த சர்வ நபிமார்களின் சட்ட திட்டங்களிலும் கடமையாக்கப்பட்டே வந்திருக்கின்றது. சென்றுபோன பல வர்க்கத்தார்களும் கூட்டத்தார்களும் இந்நோன்பை வைத்தே இருக்கின்றனர். ஆனால் நம்பாலுள்ள நோன்பின் கட்டளைகளும் எண்ணிக்கைகளும் காலமும் முன்சென்ற வர்க்கத்தரார்களுக்கு மாறுபட்டிருக்கலாம். ஏன் இப்பொழுதும் கூட காணலாம். அனேக பல சமயத்தவர்கள் ஏதேனுமொரு விதத்திலும் தோற்றத்திலும் நோன்பு நோற்பவர்களாகவே தென்படுகின்றனர். எனினும், மனிதர்கள் இந்நோன்பை, முறையைத் தங்கள் சொந்த எண்ணங்களைக் கொண்டு பற்பலவிதமாய் பின்னர் மாற்றியிருக்கின்றனர். இதைத்தான் எமது வேதமாம் குர்ஆன் ஷரீப், "ஏ நன்னம்பிக்கை கொண்டவர்காள்! உங்களுக்கு முன் சென்றவர்கள் மீது கடமையாக்கப்பட்டதேபோல் உங்கள்மீதும், நோன்பு கடமையாக்கப்பட்டிருக்கிறது' என்று அதிபகிரங்கமாய் அறைகின்றது. இவ்வாக்கியத்தால், நமக்கு முன் சென்றுபோன அனேக பல மார்க்கங்களுள்ளெல்லாம் இந் நோன்பென்பது' அல்லாஹ்வினால் கடமையாக்கப்பட்டிருந்ததென்றே நிச்சயமாய்த் தெரிந்து கொள்கிறோம்.

நீவிர் நிதானமாய்க் கவனிக்க வேண்டிய விஷய மென்னவெனின், ஒவ்வொரு காலத்திலும் நோன்பென்னும் இவ்வணக்கத்தை ஆண்டவன் ஏன் கட்டாயப்படுத்தி, இருக்கவேண்டும் என்பதே. இதை இங்கு கவனிப்போம்: இஸ்லாத்தின் உண்மை நோக்கமானது, மனிதன் அவனுடைய வாழ்க்கை பூராவையும் அல்லாஹ்வுடைய வணக்கமாகவே செய்துவிட வேண்டுமென விரும்புகிறது. மனிதன் அடிமையாய்த் தோன்றி யிருக்கிறான். அடிமைத்தனம் என்பதும், பணிதல் என்பதும் மனிதனின் இயற்கையா யிருக்கிறது. எனவே மனிதன் எண்ணும் போதும், கிரியைகளைச் செய்யும் போதும் தன் அடிமைத் தன்மையை விட்டும் நீங்கி, ஒருவிநாடியும் வெளியிற்சென்று சுயேட்சையாய்த் திரிய முடியாதவனா யிருக்கிறான். ஆனால் இவன் தன்னுடைய வாழ்க்கையின் ஒவ்வொரு காரியத்திலும் அல்லாஹ்வுக்குப் பிரியமானதும் சந்தோஷமானதும், எச் செய்கையிலிருக்கிற தென்பதை ஒவ்வொரு சமயமும் எப்பொழுதும் கவனிக்கவேண்டியவனா யிருக்கிறான். இப்படியே அல்லாஹ்வின் கோபமும் அவனது வெறுப்பும் எக் கிரியையிலிருக்கிறது என்பதையும் கவ

னிக்காம லிருப்பதும் எப்பொழுதுமே கூடாது. எனவே இதைத் தெரிந்து கொண்டபின் அல்லாஹ் விரும்பும் செய்கையின் பக்கலே இவன் செல்லவேண்டியவனா யிருக்கிறான். மேலும் எதை ஆண்டவன் வெறுக்கிறானோ அதை விட்டும் வெகு தூரத்துக்கப்பால் அஞ்சி பயந்து ஓடவேண்டியவனாயிருக்கிறான். இங்ஙனமே மனிதன் தன்னுடைய வாழ்க்கை பூராவையும் செய்து கொண்டுவிடுவானாயின், இத்தகையோன் தன் எஜமானின் பணியை அவனுக்குரிய உரிமையைச் செய்துவிட்டானென்று கூறலாம். இதைத்தான் எமது குர்ஆன், 'மனிதவர்க்கத்தையும் ஜின்னு வர்க்கத்தையும் வணங்குவதற்காக வல்லாமல் நாம் சிருஷ்டிக்கவில்லை', என்று சுருக்கமாய்ச் சுட்டிக்காட்டி விளக்குகின்றது.

சோதரீர், இன்னமும் சிறிது கவனிப்பீர்களாக: தொழுகை, நோன்பு, ஜகாத், ஹஜ்ஜு ஆதியவணக்கங்கள் நம்மீது கடமையாக்கப்பட்டிருக்கிற தென்பதை அறிவீர்கள். அவ்வணக்கங்களின் உட்கருத்தானது, மேலே கூறிய முறையில் மனிதனை மாற்றி பெரிய வணக்கக்காரனாய் ஆக்கிவிடவேண்டு மென்பதாகவே காணப்படுகிறது. இவ்வணக்கங்களை நமக்குக் கடமையாக்கப்பட்டிருப்பதால், நாம் பிரதி தினமும் ஐந்துவேளையும் தொழுதுகொண்டு விட்டோம் என்றும், ரமலான் மாதம் வந்தடுத்ததும் அம்மாதம் முழுதும் காலையிலிருந்து மாலைவரை பசித்துக்கொண் டிருந்துவிட்டோம் என்றும், பணமுள்ளவர்கள் பிரதி ஆண்டும் ஜகாத் என்னும் ஏழைவரியைக் கொடுத்துவிட்டோமென்றும், ஆயுளில் ஒருமுறைஹஜ் என்னும் பிரயாணக் கடமையைச் செய்து விட்டோமென்றும் எண்ணிக்கொண்டு விடுவதால் அல்லாஹ்வின் கடமையைப் பூர்ணமாய், அவனுக்கு நீங்கள் செய்யவேண்டிய பணியைச் செய்துவிட்டீர்க ளென்றும், இதற்குப் பின் அவனுடைய அடிமைத் தன்மையினின்றும் விடுதலைப் பெற்றுவிட்டோமென்றும்நினைத்து, மனம்நாடியவற்றையெல்லாம் செய்துகொண்டு அலைவது முடியவே முடியாது. மேலே கண்ட இவ்வணக்கங்களின் இரகசியமென்ன? இவற்றின் காரணமாய் மனிதன் தன்னுடைய நடை உடை பழக்க வழக்கம் சொல் செயல் எண்ணம் பூராவையும் அல்லாஹ்வின் வணக்கத்துக்குரிய அவன் சந்தோஷிக்கத்தக்க முறையில் விதத்தில் மாற்றிவிடவேண்டுமென்பதேயாம். பின்னர் இவ்வளவு பெரிய அருமையான அபார தூய குணமுள்ளவனாய் மனிதனை நோன்பென்பது எப்படிச் செய்துவிடுகிறதென்பதைக் கவனிப்போம்:

நோன்பைத் தவிர இதர வணக்கங்களெல்லாம் ஏதோ ஒரு முறையில், மக்களிடையே பகிரங்கமாய்த் தென்படக் கூடியனவாய் அமைந்திருக்கின்றன. உதாஹரணமாய், தொழுகையின்போது மனிதன், அமர்வதும் எழுந்து நிற்பதும் குனிவதும்நிமிர்வதுமாயிருக்கிறான். இதை ஒவ்வொரு மனிதனும் கண்ணுற்றல் சாலும். ஹஜ் என்னும் பிரயாணத்தின்போது மனிதன் நீண்ட வழிப்போக்கனாய்ச் சமைகிறான். இவன் தனியாகவுமில்லை. இலட்சக்கணக்கான மனிதர்களுடன் சேர்ந்தே போகிறான். இஃதும் மனிதர்களுக்கு மறைவானதல்ல. ஜகாத் என்னும் ஏழை வரியுங்கூட



குறைந்தபட்சம் ஒருமனிதன் கொடுக்கிறான். மற்றொருவன் அதைப் பெறுகிறான். எனவே இத்தகைய வணக்கங்களின் நிலைமை யெல்லாம் மறைவானதா யில்லை யென்பதை நீங்கள் கவனிக்கவேண்டும். மேற்குறிப்பிட்ட வணக்கங்களில் நீவிர் ஈடுபடுவீராயின், அதை உலகமக்கள் நன்கறிவர். அவ்வணக்கங்களை நீங்கள் செய்யவில்லையாயின் அதையும் அகிலமக்கள் அறியாமலில்லை. ஆனால், நோன்பென்பது இங்ஙனமில்லை. இதன் நிலைமை அடியானுக்கும் ஆண்டானுக்கு மிடையே மறைவான அம்சமாயிருக்கிறது. உதாரணமாய், ஒருவன் இதர மனிதர்களுடன் சஹ்ரின்போது உணவருந்துகிறான். பின்னர் நோன்பு திறக்கும் நேரம்வரை ஒன்றும் பகிரங்கமாய் உண்ணாமலும், பருகாமலுமிருக்கிறான். ஆனால் இரகசியமாய் ஏதோ சாப்பிட்டு விடுகிறான், அல்லது குடித்துவிடுகிறான் என்றால், இவ்விஷயம் உலக மக்களுக்குத் தெரியவே தெரியாது. மனிதர்களெல்லாம், இவன் நோன்பு வணக்கத்தைப் பூண்டவனாய் இருக்கிறானென்றே எண்ணுவர். ஆனால் இவனுடைய உண்மையான விஷயம், அல்லாஹ் ஒருவனுக்குத்தான் தெரியக்கூடியதா யிருக்கிறது. ஆகவே நோன்பெனும் வணக்கமானது இதர வணக்கங்களைப் போல் பகிரங்கவணக்கமாய் இல்லையென்பதை மீண்டும் நீங்கள் நன்கு கவனிக்கவேண்டும்.

நோன் பின் இத்தகைய நிலைமையை உங்கள்முன்னே நிறுத்துங்கள். பின்னர் தீர யோசித்துப் பாருங்கள். ஒரு மனிதன் உண்மையிலேயே நோன்பு வைக்கிறான். கள்ளத்தனமாகவோ, வேண்டுமென்றோ ஒன்றையும் உண்ணாமலும் பருகாமலுமிருக்கிறான். கடுமையான தாகம் வந்தடுத்து தொண்டைக் குழியெல்லாம் காய்ந்து வறண்டு போயிருப்பது தெரிந்தும், ஒரு துளி தண்ணீருங்கூட குடிக்காமலிருக்கிறான்; கடினமான பசிப்பிணி அவனைத் தீண்டி சகிக்கமுடியா நிலைமையைப்போல் தென்படினும் அதைப் பொருட்படுத்தாமல் ஒரு வஸ்துவையும் உட்கொள்ளாமலிருக்கிறானென்றால், மறைவான சர்வ காரியங்களையும் சகல விஷயங்களையும் அல்லாஹ் பரிபூரணமாய் அறிகிறவனா யிருக்கிறானென்பதை அவன் எவ்வளவு உறுதியாய் நம்பியிருக்கிறான் என்று பாருங்கள். தன்னுடைய செயல்களையெல்லாம் உலகத்தாருக்கு மறைக்கலாம். ஆனால் ஆண்டவனிடம் அவற்றை மறைத்தல் முடியாது என்பதையும் அவன் அறிந்தவனாகவே யிருக்கிறான். மாபெருங் கஷ்டங்களுக்குள்ளெல்லாம் சிக்கியபோதுங்கூட அல்லாஹ்வுடைய அச்சப்பாட்டின் காரணமாய் நோன்பென்னும் வணக்கத்துக்கு விரோதமான எத்தகைய கிரியையும் செய்யாமலிருப்பதுடன் அல்லாஹ்வுக்குஅதிகமதிகம் அஞ்சி நடப்பவனாகவே நிற்கிறான். இத்தகைய முறையில் நோன்பென்னும் வணக்கத்தைக்கைக்கொள்ளுபவன், இறுதிநாளின்போது ஏற்படும் விசாரணையைக் குறித்து அதிக அச்சங் கொண்டவனாகவே காணப்படுகிறான். இவன் குறைந்தது 360 மணி நேரம் தொடர்ச்சியாய் நோன்பு நோற்பவனா யிருக்கிறான். இதற்கிடையே ஒரு நிமிஷங்கூட இறுதிநாள் சம்பந்தமான எத்தகைய சந்தேகமும் இவனுக்கு ஏற்படுவதாய்த் தென்படவில்லை. என்னெனின், இறுதித் தீர்ப்புநாளின்

விஷயத்தில் சந்தேகம் ஜனிக்குமாயின்; அதாவது இறுதிநாளென்பது உண்டோ இல்லையோ, தண்டனையும் நற்சுகமும் ஏற்படப் போகிறதோ இல்லையோ என்ற எண்ணம் மனதிலுதிக்குமாயின், இவன் தன்னுடைய நோன்பைப் பரிபூரணமாய் செய்ய முடியாதவனாய் மாறி விடுவான். ஐயப்பாட்டின் இயற்கையானது மனிதனின் மனோ உறுதியையெல்லாம் கலகலக்கும்படிச் செய்யக்கூடியதாயிருக்கிறது. எனவே இறுதிநாள் விஷயத்தில் சந்தேகம் ஜனிப்பது இந்நோன்பின் வணக்கத்திலும் குறைபாடுகளை உண்டு பண்ண வல்லதாயிருக்கிறது.

ஆகவே இங்ஙனம் ஆண்டவன் பிரதியாண்டும் ஒரு மாதம் பூரணமாய் முஸ்லிம்களுடைய நன்னம்பிக்கை யென்னும் ஈமானை பரிசோதனை செய்கிறான். இப்பரீட்சையில், எத்தனை மனிதர்கள் தேறுகின்றனரோ அவர்களின் ஈமானானது அதற்குத் தக்க முறையில் அதிக உறுதியுள்ளதாகவே ஆய்விடுகிறது. இஃது உண்மையில் பரீட்சைகளுள் பரீட்சையாகவும், பயிற்சிகளுக்குள்ளெல்லாம் பெரிய பயிற்சியாகவுமே அமைந்து கிடக்கிற தென்னலாம். தாங்கள் ஒருவனிடம் ஒரு பொருளை பாதுகாப்புக்காக (அமானத்தாக) வைப்பீர்களாயின், நீங்கள் அவனுடைய மனோ நிலைமையையும் எண்ணத்தையும் பரிசோதிக்கிறவர்களாகவே இருக்கிறீர்கள். எனவே அவன் இப்பரிசோதனையில் வெற்றிபெறுவானாயின் அதில் எத்தகைய மோசமும் விநாசமும் உண்டு பண்ணவில்லையாயின், அவன் இன்னமும் அதிகமதிகம் இத்தகைய பொறுப்பை ஏற்றுக்கொள்ள சக்தி பெற்றவனாகவும், யோக்கியமுள்ள அபார நற்குண தன்மையுள்ளவனாகவும் சர்வ மக்களுக்கும் நம்பிக்கைக்குரியவனாகவும் சமைந்து விடுகிறான். இங்ஙனமே ஆண்டவனுங்கூட தொடர்ச்சியாய் ஒன்றுக்குப்பின் மற்றொன்றாய், ஒரு மாத காலம் பிரதி தினம் 12 அல்லது 14 மணி நேரகாலம்வரை உங்களுடைய ஈமானென்னும் நன்னம்பிக்கை எவ்வளவு தூரம் உண்மையாயிருக்கிறதென்பதைப் பரிசோதிப்பதை நுங்களிடம் விரும்புகிறான். ஆகவே இப்பரிட்சையில் நீங்கள் பரிபூர்ணமாய்த் தேறி வெளி வருவீர்களாயின் உங்களுக்குள்ளால் வேறு பல நன்மைகளெல்லாம் உபயோகமான நற்குணங்களெல்லாம் தானே தோன்றுகின்றன. இதன் காரணமாய் நீவிர் பயந்து, இதர பாவங்களிலும் ஈடுபடாமல் தானே தப்பிக்கொள்வீர்கள். மறைவாயுங்கூட சர்வ ஞானியாம் அல்லாஹ்வுக்கு விரோதமான காரியங்களிலீடுபடாமல், அவனுடைய சட்டதிட்டங்களை உடைத்தெறியாமல் நடந்துகொள்வீர்கள். மேலும் உங்களுக்கு ஒவ்வொரு சமயத்திலும் இறுதித்தீர்ப்பு நாளின் எண்ணம் அடிக்கடி உண்மையாகவே தோன்றிக் கொண்டிருக்கும். அந்நாளில் மனிதர்களின் சர்வ இரகசியக் காரியங்களெல்லாம், மெய்யான உருவத்தில் எதிரே வந்து நிற்கும் என்பதையும் அதிகம் நம்புவீர்கள். (வரும்)

# ஜின்னுஹ் கீதம்

## IN PRAISE OF Mr: JINNAH

By

(ஜமீன் ஆத்தூர் ஜனுப் அப்துல் வஹ்ஹாப் சாஹிப், விழுப்புரம்)

**'பாரினிலே புகழ்' என்ற மெட்டு**

சுந்தரவீர சுயதேச முசன்மான்களே—ஒன்று
சூழ வருவீர்களே—
உத்தம ஜின்னுவின் புத்தமுத மொழி
ஓங்கிடவே புகழ்—தாங்கிடவே ததி

**(தொகைரு)**

மண்மீது புகழோடு விளங்கிய சமுகம்
மதிப்பிழந்து போவதும் நன்றோ
முன்போல கீர்த்தியும் சீர்த்தியும் பெற்றுநாம்
முன்னேறி வாழ்வதும் என்றோ

**(பாட்டு)**

எட்டுத்திசையிலும் வெற்றிவிளம்பரமே—இசை
ஏழுலகிலுமே
கட்டுப்பாட்டுக்குள்ளே கட்டுப்பட்டுவீர
காயிதே ஆஜமான்—தூயமொழிப்படி (சு.)

**(தொகைரு)**

முதிர்ஞான வடிவா யிலங்குநம்
முகமதலி ஜின்னுவின் ஆணை
துதிபாடி அல்லாஹு அக்பரென்று நாம்
தொகுப்போமே சேனை

**(பாட்டு)**

நாளும் சுதந்திரகாலம் நெருங்கிடவே—சங்க
நாதம் முழங்கிடவே—
பாலமுதச் சுவைபோலே யினித்திடும்
பாலனப்துல்வகாப் பாடுந்தமிழ்படி (சு.)

## II

டர்த்தேநஹீ துன்யாமே (என்ற மெட்டு)

சிங்காசனத் தர்பார்புரி வலிசேர்அலி ஜின்னு—ஜெகஜ்-
ஜோதிமய மாய்விளங்கும் சீர்முடி மன்னு—மதி
சீதளவண்ணு— (சி)

சங்கக்கலை வானரிசை ஞான விநோதா —சட்ட
சாகரமென வேதுலங்கும் சாதுர்ய போதா—விரி
தாலமுற்றும் வாழ்த்தும்மகா சாமர்த்திய ஜின்னு—சர்.
ஜான்சைம ணேடுசவால் சரம்விடும் மன்னு—நிறை
சால்புறும்வண்ணு— (சி)

# நூருல் இஸ்லாமும் அதன் கனித்துரையும்

(M. S. A. வாஹித்)

'ஒன்றுபட்டா லுண்டு வாழ்வு' என்ற ஆன்றோரின் அமுத வாக்கியத்திற்கேற்ப, நாம் அநீதியைச் சிறிதும் சிந்தித்துப்பாராது அலட்சியம் செய்ததனுல் நாட்டைக் காட்டிக் கொடுத்து, மற்றவர்களுக்கு விற்று அதிலிருந்து வயிர் வளர்க்கும் துரோகிகளின் ஆட்சியில் சிக்குண்டு பதறினேம், பதறுகிறோம். நாகரீகத்தின் சிகரத்தினுடைய மேல்நாட்டிலுள்ளவர்கள் என்ன கூறுகிறார்கள்? 'Union is Strength.' அதாவது ஒற்றுமையே பலம்' என்ற மூலக் கொள்கையைக் கையாள்கிறார்கள். அத்தகைய ஒற்றுமையை நிலவுவதற்கென்றெண்ணி, மேலுக்கு நாவினல் சொல்லிக் கொண்டு உள்ளத்தில் முஸ்லிம்கள் ஒழியவேண்டும் அழியவேண்டுமென்றெண்ணிக் கொண்டிருக்கக்கூடிய ஒரு கூட்டத்தாரின் சூழ்ச்சியை விளக்கி நம் சமூகத்தை உயிருள்ள சமூகமாகச் செய்வான் வேண்டி, நந்தமிழ் நாட்டின்கண் இன்றைய நெருக்கடியான சந்தர்ப்பத்தில் வீர முஸ்லிம்களான நம்மை உறங்கிவிடப்போகிறோமென வீறிட்டெழுப்புவான் வேண்டி கர்ஜித்து நிற்கும் நம் "நூ. இ." பத்திராதிபரை அளவு கடந்த முறையில் எம்மால் புகழ முடியுமென்பதைப் பற்றி நிரூபிக்க நான் வேட்கை கொள்ளுகிறேன்.

---

ஆர்ப்பரிக்கும் ஜவஹர்லாலின் ஆணவப்பேச்சு—உங்கள்
ஆணித்தர வார்த்தைக்கெதிர் அடங்கியே போச்சு—மகா
ஆத்மசக்தி யைக்குகையில் அடக்கிய ஜின்னு—அவர்
ஆட்சியைக்கன வாகப்புவியில் ஆக்கிய மன்னு—உரை
ஆடிடும் வண்ணு— (சி)

பத்துக்கோடி முஸல்மான்கள் பாகத்தைக் கேட்டு—சட்ட
பாயிண்டுடன் போட்டுவிட்டீர் பாகிஸ்தான் சூட்டு—லண்டன்
பார்லிமெண்டு போர்டிலதைப் பாங்குடன் ஜின்னு—உயர்
பாஷையி லரங்கேற்றி வெற்றிபாடிய மன்னு—எழில்
பரலொலி வண்ணு— (சி)

சொந்தசுய ஆட்சியில் சுயநிர்ணயம் நமக்கு—வேண்டி
சூளுரைத்து வானகீர சுதந்திரத் தமுக்கு—கடல்
சூழுலகில் ஓங்கிடச்செய் சுதேசிய ஜின்னு—காங்கரஸ்
சூட்சியெல்லாம் விளக்கிவைத்த சோபன மன்னு—புகழ்
சோபிதவண்ணு— (சி)

வீரஞ்செறி ராஜதந்திர வேந்தனும் நீரே—வெற்றி
வேல்பிடித்து போர்புரியும் வீரனும் நீரே—லார்ட்
வெல்லிங்டனை ஆட்டிவைத்த வீரிய ஜின்னு—தமிழ்
வாகையணி யப்துல்வஹாப் வாழ்த்திடும் மன்னு—திரு
வானொலிவண்ணு— (சி)

Best copy available

மாண்பு மிக்க நந்தமிழ் முஸ்லிம்காள்! இன்றைய யுத்தம் உலகம் பூராவையும் பாழ் படுத்திக்கொண்டிருக்கும் இந்தச் சந்தர்ப்பத்திலே பிநங்கு, சிங்கப்பூர், மலாயா, பர்மா, இத்தனை நாடுகளும் எதிரியின் வசமானதே! அந்தோ! பரிதாபம்! என் செய்வது? இன்றைய கோர யுத்தம் நடந்து கொண்டிருக்கும் இந்நிலைமையில் இப்பாரின் மக்கள் என் செய்ய முடியும்? இன்றைய நெருக்கடியான காலத்திலே வீரிட்டெழுந்துழைத்துவரக் கூடிய நம் "நூ. இ." தைக் கரகோஷமிட்டு ஆதரிப்பது நந்தமிழ் நாட்டு முஸ்லிம்களெல்லார்மீதும் கடமையாகுமல்லவா? இன்றைய உலகத்தில் ஒரு சமூகமோ, ஒரு கலையோ, ஒரு நாகரீகமோ, ஒரு மதமோ, ஒரு மார்க்கமோ முன்னேற வேண்டுமாயின் இதற்குபாயம் பிரசாரக் கல்வியேயன்றி வேறொன்றுமில்லை. நந்தமிழ் நாட்டில் நந்தமிழ்ப்பாஷையில் முஸ்லிம்கட்கெனப் பத்திரிகைகள் இருப்பதோ மிக மிகக் குறைவு என்ற விஷயத்தை நாட்கள் தோறும் இடைவிடாது பத்திரிகைகள் மூலமாகவும் பிரசாரத்தின் வாயிலாகவும் நாமெல்லோரும் அறிந்திருக்கிறோம். அந்தோ பரிதாபம்! என் செய்வது? இதைவிட வருந்தத்தக்க விஷயம் வேறெதுவுமில்லை. இந்த நெருக்கடியான காலத்தில் நந்தமிழ் நாட்டு முஸ்லிம்கள் நந்தமிழ்பாஷையில் நூற்றுக்குத் தொண்ணூரு பேர் வீதம் தற்குறிகளாக இருந்தால் இதைவிட வருந்தத்தக்க விஷயம் வேறெது என்பதைப்பற்றி நாம் உணரவேண்டும். இந்தச் சோர்ந்த காலத்தில் நிமிர்ந்து ஜோதிபோல் பிரகாசித்து நிற்கும் நமது நூ. இ. பத்திரிகையைய நந்தமிழ் நாட்டில் பணம் படைத்த தனவந்தர்களும் வியாபாரிகளும் ஒவ்வொரு ஆடவர்களும் அவரவர்களுக்குத் தக்க முறையில் ஆதரிக்க வேண்டும். நமது "நூருல் இஸ்லாத்"திற்கு ஜீவிய சந்தாதாரர்களாகவுமிருந்துவர வேண்டும். அன்றியும் அதற்கு ஊக்கமும், உற்சாகமும், வேட்கையும், வேட்டலும் அளிப்பது நந்தமிழ் நாட்டு முஸ்லிம்களெல்லோர் மீதும் முக்கியக்கடமையாகும். இன்று நடந்து கொண்டிருக்கும் அன்னியப் பத்திரிகைகள் எத்தனையோ வாரப்பத்திரிகையாகவும், எத்தனையோ வாரம் இருமுறையாகவும், எத்தனையோ தினசரியாகவும் இருக்கின்றனவே என்று நாம் உணரவேண்டும். ஆரம்பித்து சிலமாதங்களான கல்கி, மாதம் ஒரு முறையாகவும் மாதமிருமுறையாகவும் வாரம் ஒரு முறையாகவும் நடந்து வருவதை நாம் கண்கூடாக இவ்வமயம் பார்க்கிறோம். ஆனால் அஃதே போன்று நந்தமிழ் முஸ்லிம்களெனப்படும் நாமெல்லோரும் நமது "நூருல் இஸ்லாம்" பத்திரிகையை மாதமிருமுறையாகவும் வாரம் ஒரு முறையாகவும் வாரமிருமுறையாகவும் தினசரியாகவும் நடத்த ஊக்கத்தையும் உற்சாகத்தையும் அதற்கானநம்பிக்கையையும் காட்டி நந்தமிழ் நாட்டு முஸ்லிம்களெல்லோரும் பக்கபலமாக இருந்து நடாத்த வேண்டுமென்று ஏகபராபரனிடத்தில் இறைஞ்சி அருள் புரியும்படி வேண்டுகின்றேன்.

குறிப்பு:—பொதுவாய் அகிலத்தில், குறிப்பாய் இந்தியாவில் பற்பல சமயங்களும் மல்கிக் கிடக்கின்றன. இதனை எவரும் மறுப்பதற்கில்லை. எனவே, இது சமயம் ஒவ்வொரு சமயவாதிகளும் தங்கள்



தங்கள் சமூகத்துக்கென தம்மால் கூடுமான வகையாலெல்லாம் பாடுபட்டே வருகின்றனர். உலக ஞானமுள்ளவர்களுக்கு இவ்விஷயம் கண்கூடு. இதை நிரூபிக்க அத்தாட்சியோ ஆதாரமோ ஒன்றும் வேண்டியதின்று. இத்தனை சமூதாயத்தாருள் முஸ்லிம்களும் ஒரு வர்க்கத்தாராய், ஏன் பெரிய சமூகமாய் விளங்குகின்றனர். எனினும் முஸ்லிம்கள் இன்னமும் சரியாய்த்துயிலினின்றும் எழுந்து வரவில்லை யென்றே கூறவேண்டியிருக்கின்றது. என்னெனின், இந்தியாவில் காணப்படும் இதர சமயவாதிகளெல்லாம், மேன்மேலும் மேம்பாடடைய போட்டியிட்டுச் சென்று கொண்டிருக்கின்றனர். இதற்காக அனேக பல வழிகளாலும் மார்க்கங்களாலும் அதிகமதிகம் தியாகமும் செய்து வருகின்றனர். முஸ்லிம்களோவெனின், இதரர்களைப் பார்த்துங் கூட அவர்களுக்குப் பின்னே செல்ல, முன்பின் யோசனை செய்கின்றவர்களாகவேயிருக்கின்றனர். மேலும் தங்கள் சமூகம் முன்னேற்றமடைய வேண்டும் என்னும் விஷயத்திலோ இவர்கள் யாருக்கு வந்த விருந்தோவென பொருட்படுத்தாதவர்களாகவேயிருக்கின்றனர்.

உதாரணமாய் இவண் ஒரு விஷயத்தைக் கவனிப்போம்: பொதுவாய் இந்தியாவில் இது சமயம் முஸ்லிம்களுக்கு அரசியலில் புத்துணர்ச்சி யளித்துக் கொண்டிருப்பது முஸ்லிம் லீகாகும். இதன் தலைவராம் காயிதெ அஃலமவர்கள் முஸ்லிம்களின் பொது நன்மைக்காக 10 இலட்சம் ரூபாய் வேண்டுமென்றார். இதற்குச் சேர்ந்ததென்ன? 4 இலட்சம் கூட இல்லை. இதற்கு மாறாய், ஒரு சமயம் காந்திஜீ 'கோடி ரூபாய் வேண்டும்; உடனே சுயராஜ்யம் வந்துவிடும்' என்றார். மக்களோ 1 கோடிக்குமேல் கொடுத்தனர். பிரயோசனப்படவில்லை. சுயராஜ்யம் எங்குளதென்றும் தெரியவில்லை. இதோ சமீபத்தில், நேருஜீ ஒரு பத்திரிகையின் ஜாமீன் தொகைக்காக 12,000 வேண்டுமென அறிக்கை வெளியிட்டிருந்தார். 40,000க்கு மேல் பணம் வந்து குவிந்துவிட்டது. விஷயம் இங்ஙனமிருக்க, நம் முஸ்லிம் சகோதரர்களின் மனோ நிலைமையையும் கிரியைகளையும் கவ்னித்துப் பாருங்கள். தங்கள் சமூகத்தார் திண்டாட்டத்திலும், திக்கற்றவர்களே போலும் காணப்படுகின்றனர் என்பதைப் பலர் உணர்ந்தே யிருக்கின்றனர். ஆயினுமென்ன? அவர்களை நல்ல நிலைமைக்குக் கொண்டுவர வேண்டுமென நினைப்பதில்லை; அதற்கான கிரியைகளைச் செய்ய முன் வருவதில்லை; முன் வந்தால் வந்தது சனியன் என்று எண்ணுமலுமிருப்பதில்லை. இத்தகைய எண்ணம் இஸ்லாத்தின் போதனைக்கு முரண்பட்டதாயிருக்கிறதென்பதை இவர்கள் கவனிப்பதுமில்லை.

ஆனால், பொதுவாய் இந்தியாவில், குறிப்பாய் நமது தென்னாட்டிலுள்ள பெரிய தனக்காரர்களெல்லாம் ஒரு மனப்பட்டவர்களாய்க் குறுகிய எண்ணம் படைத்தவர்களாயிருக்கின்றனர் என யாம் கூறவில்லை. ஆங்காங்கேயுள்ள ஒரு சில தனவந்தர்களும், தாங்கள் நினைத்ததைத் தங்கு தடையின்றி செய்யுந் தன்மை படைத்தவர்களும் நல்வழியில் ஈடுபட்டு நற்காரியங்களைச் செய்தே வருகின்றனர். இவர்களை நாம் போற்றாமலும், இவர்களின் குணத்தை நாம் மெச்சாமலுமிருப்

பதற்கில்லை. இவர்களின் பயனுகவே தாம், இதுசமயம் இந்தியாவில் முஸ்லிம்களென்போர்க்கு கௌரவமும் கண்ணியமும் நிலைத்திருக்கிறதெனலாம். இத்தன்மைத்தாய பெருமக்களின் பேராதரவால்தான் கேவலம், இச்சிறிய மாசிகையாம் 'நூருல் இஸ்லாம்' கூட இவ்வவனியில் உயிர் வாழ்ந்து வருகிறதென்பது மிகையன்று. சமூகம் முன்னேற்றமும் சீர் திருத்தமும் அடைய பிரசாரம் மஹா முக்கியம். பிரசாரத்தில் பல வகையுண்டு. இவைகளுள், பத்திரிகைப் பிரசாரமே இது சமயம் மஹா மேலானதும் சிகரமானதுமாய் விளங்குகின்றது. இந்த உண்மையைப் பெரும்பாலான முஸ்லிம் சோதரர்கள் கவனிப்பவர்களாயில்லை. தற்சமய பத்திரிகைப் பிரசாரமானது, வாள் முனையைக் காட்டினும் அதி கூர்மையாய் வேலை செய்வதாயிருக்கிறது. கூர்ந்து கவனிப்பவர்கள் உண்மைதான் என ஏற்றுக் கொள்வர்.

ஆயினுமென்ன? முஸ்லிம்களுக்கென நடந்து கொண்டிருக்கும் பத்திரிகைகளைக் கவனித்துப்பாருங்கள். அவை அழுது கொண்டேயிருக்கும். தான் பசியுடன் தள்ளாடி அயர்ந்து நடந்து கொண்டிருப்பதைக் காட்டும். உதவியாளர்களும், ஆதரிப்போரும் இல்லையெனின், அப்படியே மாண்டு போவதாய்த் தோற்றமளிக்கும். ஏன்? எதற்காக? வெனின், முஸ்லிம் சமூகத்தார் இவ்விஷயத்தில் தங்கள் கவனத்தைச் செவ்வனே செலுத்தாமலிருப்பதால்தான்! நண்பர்கள் உண்மையைக் கவனிக்க வேண்டும். இதுதான் எமது வேண்டுகோள். ஒரு சில தூண்கள் எவ்வளவு நாள் தாம் "நூருல் இஸ்லாம்" கட்டடத்தைத் தாங்கிக் கொண்டிருக்கும். இக்கட்டிடம் எல்லோருக்கும் சொந்தமானது. இதை அழியாமல் காப்பாற்ற வேண்டியது அவரவரின் கடமையாகும். இக்கட்டிடத்தைக் காப்பாற்றி இதன் மூலம் எத்தனையோ மக்களுக்கு மானிட உரிமை நிழல்—நன்மை—தர உதவி செய்து வரும் உபகாரிகளுக்கு ஆண்டவன் எவ்வளவோ நன்மை செய்வானென்பதில் ஐயமேயில்லை. ஆண்டவனருளால் அவர்கள் நனி வாழ்க! முஸ்லிம்கள் வாழ்க!! (ப - ர்,)



# மரணபடுக்கையில் ஒரு ஜீவன்!

(எம். எஸ். ஹமீத், கீரனூர்).

"அய்யோ! வாழ்க்கை எனக்கு ஒரு அதிசயக் கனவாகி விட்டதே! நான் உண்மையிலேயே இறந்து போய்விடுவேனு? அப்படியானுல்... அப்படியானுல்......நான் இன்னும் ஒரு முறையாவது இந்தப் பரந்த—இன்ப உலகில் ஜனிக்கமாட்டேனு?......

முடியாது இனி உன்னுல் பூலோகத்தை கற்பனை செய்து கூடப் பார்க்க இயலாது!"

ஆனுல்,.......என்னுடைய கணக்கிலடங்காத ஆஸ்திகளெல்லாம்?..."

"வீடு, மாடு, தோட்டம், துறவு, பெண்டு, பிள்ளை, தங்க நகைகள்... இவைகளைப்பற்றியா நீ வினவுகின்ருய்?"

"அந்த ... ஆம் ... அவைகளைப் பற்றிதான்! என் பொருள்களைப் பற்றி!

"அட மூட மானிடனே, 'பொருள்' என்னும் ஆஸ்தி சுவர்க்கவாயிற்படியினுள் நுழையாது. 'அருள்' ஆஸ்தி உன்னிடம் இருக்கிறதா?"

"அருளா—அப்படி என்ருல் என்ன?"

"பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்லை; அருளில்லார்க்கு அவ்வுலகமில்லை' என்று நீ கேள்விப்பட்டிருக்கிருயா?"

"இல்லையே"!

"நீ உலகில் பிறந்ததுமுதல் இன்று இந்த வினுடிவரை போக போக்கியங்களில் உழன்றவன் தானே?"

"ஆமாம், எனக்கு 'துன்பம்' என்ற பதத்தின் அனுபவ அர்த்தம் தெரியாது."

மரணப்படுக்கையில் இருந்த ஜீவன், மனச்சாட்சியுடன் போராடியது. பஞசணையின் மேல் படுத்துறங்கிய அந்த ஜீவன் மண் குழிக்குப் போக ஆசைப்படுமா?

* * *

நோயாளியான செல்வந்தன் இன்றுவரை மரணத்தை நினைத்தவனல்ல! 'மரணம்', தன்னை யல்லாமல் அவன் சமீபமாக மற்ற மானிடர்களைப் பீடிக்கும் ஒருதொத்து வியாதி என்று எண்ணியிருந்தான். ஆனுல், ஆண்டவன் நியதி வேறு விதமாக இருந்தது. செல்வந்தன் நினைத்திருந்ததுபோல அவ்வளவு சுலுபமாக—டாக்டர்களால் சொஸ்தம் செய்துவிடக்கூடிய நோயல்ல மரணம்.

செல்வந்தனின் உடல் தளர்ந்தது. கண்கள் ஒளி யிழந்தன. காதுகள் அடைத்து விட்டன. அவனுல் நடக்க இயலவில்லை. பலவிதமான 'டானிக்'குகளுக்கும் சக்தி இல்லாது போய் விட்டது. டாக்டர்களும் கைவிட்டுச் சென்றனர்.

"இனி நம்பிக்கைக்கு இடமில்லை" என்று வருந்திய குரலில் ஸ்பஷ்டமாகச் சொல்லிச் சென்ருன் ஒரு பிரபல டாக்ட்டர்.

செல்வந்தனின் மனுேவுறுதி எங்கோ காற்றுவாக்கில் பறந்து சென்று விட்டது. "இத்தனை வருஷகாலமாக உலகிலிருந்து கோடி கோடியாகப் பொருள் சேர்த்து என்ன பயன்? 'அருள்' என்ற அவ் வருமையான ஆஸ்தியை நான் தேட முயற்சிக்கக் கூட இல்லையே" என்று வாய்விட்டுக் கதறினுன்.

செல்வந்தனின் சிந்தனைகள்பற்பல விதமாய்ச் சுழன்றன. அவன் மரணத்திற்குப் பின் நடக்கக்கூடியவைகளை மரணப்படுக்கையில் தான் எண்ணினான். 'ஹோ' வென்று கதறிக் கதறி அழுதான். அழு. நீ இன்னும் அழு. நன்றாக அழு. வேண்டும், உனக்கு இதுவும் வேண்டும், இன்னமும் வேண்டும்!

அவன் செய்த அட்டகாசங்களுக்கு மன்னிப்பு உண்டா?—அவனது ஆன்மாவிற்காவது சாந்தியுண்டா?

வட்டி, வட்டி என்று எத்தனை ஏழைகளின் வயிற்றில் அடித்து வட்டி வாங்கியிருக்கிறான். பஞ்சணையின்மேல் படுத்து தலையணையில் சாய்ந்து, 'ஸிஸர்ஸ்' சிகரெட்டு கையில் புகைந்தவாறு, தனக்கு அடிமைப்பட்டுள்ள ஆட்களை எவ்வளவு கேவலமாகப் பேசி இருக்கிறான். ஊரில் அவனுக்குத் தெரியாத தாசி வீடுகள் ஒன்று உண்டா? எத்தனை கன்னிகளின் தூய கற்பு—செல்வந்தனின் முரட்டு மிருகக் கையால் கசக்கி எறியப்பட்டுள்ளன! அந்தோ, அவர்களின் கதி என்னவாயிற்று?...அக்கன்னிகளின் தூய்மையான கற்பு—மாசு படிந்து, பொலிவிழந்து வாடியது தான் கண்ட பலன்!

விலை யுயர்ந்த சீமைச் சாராயங்களால் அவன் செய்த அக்ரமங்கள் என்ன! பணக்கொழுப்பால் மண்டைக்கு கர்வம் ஏற, செல்வந்தனால் எவ்வளவு குற்றமற்ற ஆத்மாக்கள், நிரபராதிகள், 'குற்றவாளிகள்' என்று கைது செய்யப்பட்டு சிறைக்கு அனுப்பப்பட்டிருக்கின்றனர். கைதிகளின் இளமனைவியரும், கிழத்தாய்மார்களும் எரியும் பெருமூச்சும், உதிர்க்கும் கண்ணீரும் அவனைச் சும்மா விட்டு விடுமா?

ஆம், இப்பொழுது ஞாபகம் வருகின்றதா? நன்றாக யோசித்துப் பார். நீ செய்த அநியாயங்களெல்லாம் 'நியாயம்' தானா?......மூடா, ஏன் கண்ணீர் உதிர்க்கிறாய்? அதனால் பலன் வேண்டுமே, நீ குற்றவாளிதான்! அந்த ஸ்தானத்திற்கு மேல் பதவி உனக்குக் கிடையாது.

* * *

இந்த அற்ப-பூலோக வாழ்க்கைப் பிரயாணத்தில் நீ முதல் வகுப்பு வண்டியில் சுகமாகப் பிரயாணம் செய்தாய்.

இப்பொழுது உன் ஆயுள்காலம் பூர்த்தியடைந்து விடும்போல் இருக்கிறது. நீ பரிசுத்தமானதூய வானலோக ரயில் வண்டியில் ஏறவேண்டியவனாக இருக்கிறாய்.

"எங்கே 'அருள்-டிக்கேட்' ?"

"இல்லை, பொருள் இருக்கிறதுஎன்னிடம்!"

"ஓ பொருளா வைத்திருக்கின்றாய்! உன் பொருட்களெல்லாம் பூவுலகைச் சேர்ந்ததல்லவா? அது அங்கேயே நின்றுவிடும். நீ இங்கு கொண்டு வரவேண்டியது. பொருள் மட்டுமல்ல. பொற் குவியல் தந்தாலும் 'அருள்-டிக்கேட் தரமுடியாது. அது நீயே பூலோகத்தில் சம்பாதித்து, வரும்போது கொண்டு வரவேண்டிய வஸ்து!"

"அய்யய்யோ, நான் இப்படி நினைக்கக்கூட இல்லையே. என் செய்வேன்?"

'அப்படியா? அப்படியானால் அதோ அங்குபார்; நெருப்பைக் கக்கிக்கொண்டு அங்கு ஒரு 'நரகவண்டி' நிற்கிறது பார்த்தாயா? அங்கு செல். அதுதான் உனக்குத் தகுதியான வாகன இடம்!"

(இ துகற்பனைத்தோற்ற வீர்ணனை. எனினும் இதில் மனிதன் கவனித்துப் பார்க்கவேண்டிய பல கருத்துக்கள் காணப்படுகின்றன. குறிப்பாய் பணம் படைத்ததனிகர்கள் மேலே கண்ட முறையில் அநியாய அக்கிரமக்கிரியைகளில் ஈடுபடாம லிருக்க வேண்டியது மிக மிக முக்கிய அம்சமாகும். - (ப-ர்)

---

# கல்வியின் மாண்பு

**EXCELLENCE SCIENCE**

(By M. K. பீர்மைதீன் ராவுத்தர்)

கல்வி இப்பூவுலகின்கண், மானிடராகிய ஆண் பெண் இருபாலர்க்கும் அத்தியாவசியமானது. ஆண்டவன் தன் திருமறையில் "நீங்கள் அறிவில்லாதவர்களாயிருந்தால், அறிவுடையோரிடம் சென்று கற்றுக்கொள்ளுங்கள்" என்று அருளியிருக்கின்றான்.

நம்முடைய முஹம்மது நபி (ஸல்) அவர்கள் கல்வி கற்பது (பர்லு) முக்கியக் கடமை என்றும், கல்விக்கு உயிர் கொடுத்தவன் ஒரு போதும் மரணமாவதில்லை என்றும் சொல்லியிருக்கின்றார்கள். இஹ்யாவென்னும் கிரந்தத்தில் இமாம் கஸ்ஸாலி (ரஹி) அவர்கள் கூறுவதாவது:

ஒரு இன்சான் மானிடன் மிருகத் தன்மையை விட்டு நீங்குதல் கல்வியால்தான் அமைந்திருக்கிறது. அக்கல்வியைக் கொண்டுதான் இகபரமிரண்டிலும் பயனடைய முடியும். கல்வியைவிடச் சிறந்தது வேறொன்றுமில்லையெனக் கூறியிருக்கின்றார்கள்.

"நேசம் வைத்துன் னடிமை
நின்பதத்திற் கல்லாது
காசுதனக் கோவென் கண்ணே
ரஹ்மானே".

என, மஸ்தான் சாஹிப் அவர்களும் கூறி யிருக்கின்றனர். மானிடர்கள் ஜீவனம்சத்திற்கு ஊன்றுகோலாயிருப்பது கல்வியே.

"கண்ணுடைய ரென்போர்
கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லாதவர்"

என்றும் கல்வியின் பெருமையைப் பற்றிப் பெரியோர்கள் கூறியிருக்கிறபடியால், கல்வியே அறிவின் அபிவிருத்தியைத் தருகின்றது: ஆகையால் ஆண் பெண் இருபாலரும் கல்வியை அபிவிருத்தி செய்ய முயல வேண்டும்.

"தொட்டனைத் தூறு
மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறு மறிவு"

என்று பெரியார் சொல்வதற்கிணங்க மணற்கேணியானது எவ்வாறு தோண்டு மட்டும் ஊறுகின்றதோ அவ்வாறே மாந்தர்க்குக் கல்வியானது கற்கக் கற்க அபிவிருத்தியடைகின்றது. "இளமையிற் கல்" என்று சொன்னபடி சிறுபிள்ளையாயிருக்கும்போதே கல்வி கற்க வேண்டும். ஐந்தில் விளையாதது ஐம்பதில் விளையாதாதலால், பாலப் பருவம் தொடங்கிப் பயில வேண்டும்.

"கல்வியி னூங் கில்லை
சிற்றுயிர்க்குற்ற துணை"

என்பர் ஆன்றோர். கல்வியறிவு பெற்றவன் இம்மையில் சொற்சுவை பொருட்சுவைகளை அனுபவிப்பதுடன் புகழும் அடைவான். உலகிலுள்ளோர் அனைவரும் அவனிடம் அன்பு பாராட்டி மரியாதையும் செய்வர். தேசத்தையாளும் மன்னனைவிட வித்வ சிரோன்மணிகளுக்கு அதிக சிறப்புண்டு.

"மன்னனுக்குத் தன்
தேசமல்லால் சிறப்பில்லை
கற்றோர்க்குச் சென்ற
விடமெல்லாம் சிறப்பு"

எனப் பெரியோர் சொல்லியிருக்கின்றனர். ஆகையால், முதலில் கல்வியினால் அறிவின் அபிவிருத்தியைத் தேடிக்கொண்டு, பின் அறிவினால்

பொருளைத் தேடி அப்பொருளினுல்
ஆண்டவனின் திருவருளுக்குப் பாத்
திரமாகும் புண்ணியத்தைத் தேடிக்,
கொள்வதே மனிதரின் கடமையா
கும்.

பால்ய பருவம் கடந்த பின் கல்வி
கற்க முயற்சி செய்தால் அது கை
கூடாது. கல்வி கற்பவன் தெளி
வான மனதுடையவனுயிருக்க வேண்
டும். இளமைப் பருவத்தில் மனம்
எவ்விதமான கவலையுமின்றித் தெளி
வுற்றிருக்கும். அதனுல்தான் கல்வி
யிற் பெரியோர், பால பருவத்தைக்
கல்வி பயில ஏற்ற காலமாக ஏற்படுத்
தினர்.

"பருவத்தே பயிர் செய்க" என்
பதற்கிணங்க, ஒவ்வொருவரும் சிறு
வயதைத் துன்மார்க்கங்களில் விநி
யோகப்படுத்தாது, கல்வி கற்று
அதைச் சரியான வழியில் உபயோ
கித்தல் சாலச் சிறந்ததும் நலத்
தைப் பயப்பதுமாகும். இதுவுந்
தவிற, எலக்ட்ரிக் சக்தியை இரும்பு
எவ்வாறு கிரகிக்கின்றதோ, அவ்வித
மே இளவயதில் கல்வி என்ற ரசத்
தை ஊட்ட ஊட்ட காந்தம் போல்
அவ்விளமனம் கிரகித்துக் கொள்கி
றது.

கற்ருரைக் கற்ருரே
காமுறுவர் கற்றறியா
மற்ருேர் அறியார்
வருத்தமுறப்—பெற்றறியா
அந்தி பரிவாய்
மகவைப் பெருந்துயரம்
நொந்தறிகு வாளோ நுவல்.

என்பதற்கிணங்க, கல்வியின் அரு
மையைக் கற்றவரே அறியவல்லா
ரல்லது, கல்வியறிவிலார் எங்ஙனம்
அறிந்து இன்பம் எய்நுதல் கூடும்?
அறிவு நிறைந்த ஓர் பழைய காலத்
துப் புஸ்தகம் வாங்குதற் பொருட்டு,
ஒரு பெண் தன் கை மோதிரத்தை
விற்ருளாம். ஏனெனில் மோதிரம்
பின் கொள்ளலாம், அப் புஸ்தக்மோ
பின் கிடைப்பது அரிது என்று அந்
நாரீமணி கருதினுள்.

கற்ருேர் பெருமையை விளக்கப்
பல வகைகளுண்டு. உண்மையான
ஓர் கதையை இவண் விவரிப்போம்.

**கதை**

தொண்டை நாட்டில் உள்ள ஓர்
ஊரில் காளத்திப் பிள்ளை என ஒரு
வர் இருந்தார். அவர் கல்வி கேள்வி
களில் மிக்கார். நிறைந்த கல்வியுடை
யாரிடத்துச் செல்வம் நிலைக்காது
என்பது இவரிடத்து விரோதமா
கும். இவர் தன் செல்வ முழுவ
தையும் வித்வான்களுக்கும் தன்னை
ஆசிக்கும் மற்றவர்களுக்குமென்றே
கருதி யிருந்தார். தன்னிடம் வந்த
டைந்தவர்களுக்கெல்லாம் மாறுத
லின்றிக் கொடுத்து வந்தார். இவர்
கொடுக்கும் கொடையால் அந்நகரை
ஆளும் அரசனுக்கு அவமானம்
மிகுதியும் உண்டாயிற்று. அதன்
காரணமாக அரசன் காளத்திப் பிள்
ளையின் செல்வத்தைப் பல விதத்
தும் அழிக்கத் தலைப்பட்டான்.
அரசன் நினைத்தால் ஆகாத
துண்டோ? காளத்திப் பிள்ளையின்
செல்வமெல்லாம் அழிந்துவிட்டது.
அன்ருடம் வயிறு வளர்த்தற்கே
அவரால் முடியாத பக்குவத்தில்
வந்துவிட்டது. பெருஞ்செல்வர்
என் செய்வார் பாவம்! அவர் ஏற்
படுத்திய சத்திரங்களே இன்னும்
அங்கங்கே பிரபல்யமாய் விளங்கிக்
கொண்டிருக், அவருக்கே வயிற்
றுக்கு இல்லையென்ருல் அதைக்
கேட்க யாருக்குத்தான் மனம் சகிக்
கும். எனவே அவர் அந்த ஊரில்
வசிக்க மனம் சம்மதியாது தன்
மனைவியுடன் வேறு தேசம் சென்
ருவது ஜீவிக்கலாம் எனக் கருதினுர்.



'வாழ்ந்தவன் கெட்டால் வரை
யோட்டுக்கும் ஆகான்' என்றபடி
ஒருநாள் இரவில் ஒருவரும் அறியா
வண்ணம் மனைவியும் தானும் புறப்
பட்டுப் பத்து மைலுக்கப்பாலுள்ள
தம்முடைய சத்திரத்திலேயே மறை
வாகப் போய்ப் படுத்திருந்தார்கள்.
விடியுமுன் எழுந்து போய் விடலாம்
என்பது அவர் கருத்து. அங்கு
அவர் பக்கத்தில் ஒரு பிரயாணியும்
வந்து படுத்திருந்தான். சுமார்
இரவு 11 மணி இருக்கும். அப்
பொழுதுதான் அவன் அங்கு வந்
தான் போலிருக்கிறது. 11 மணிக்
குச் சத்திரத்தில் சாதம் ஏது? இவ
னுக்கோ பசி அதிகம். பரம தரித்
திரன்; பாவம் என்ன செய்வான்
வயிருே பசியால் வாடுகிறது. சோற்
றிற்கோ வேறு வழியில்லை, கையில்
காசுமில்லை கடன் கொடுப்பார் ஆங்
கில்லை. நிசிவேளை, பசியால் நித்தி
ரையும் வரவில்லை. அரை நித்திரை
யுடன் தன் தரித்திர நிலையை
நினைந்து

நீளத் திரிந்தனையே
நீங்கா நிழல்போல்
நாளைக் கென்செய்குவாய்
நல்குறவே—காளத்தி
நின்றைக்கே சென்றக்கால்
நீயெங்கே நானெங்கே
இன்றைக்கே சற்றே இரு.

என்று புலம்பினன். இதைக் கேட்ட
காளத்தியார், இப்பொழுதுதான்
நமக்கு இவரை இன்னரென்று தெரி
யவந்தது. இவர் ஒரு வித்துவான்,
வித்துவான்களுக்குத்தான் தரித்தி
ரம் இயல்பாயிற்றே. வித்துவான்
இவ்விதம் புலம்பவே அரை நித்தி
ரையிலிருந்த நமது காளத்திப் பிள்
ளையின் காதில் விழுந்தது. ஐயோ!
அவர் மனம் பட்ட பாட்டை யாரால்
சொல்லக் கூடும்? ஜீவகாருண்ய சிந்
தையுடையவர் எப்படிப் பிறர் வருத்
தம் பொறுப்பார். பிறர் வருத்தம்
பார்த்தும் திடத்தோடிருக்கும்
பேதை லோபிகளைப் போலவா நமது
காளத்திப் பிள்ளையவர்கள்! மனம்
நொந்து மனைவியைச் சத்தமின்றி
எழுப்பி, 'கேட்டனையா இவர் பாட்
டை' என்ருர். 'கேட்டேன் ஐயா!
இச் சண்டாளி இவ்வித வயிற்றெரிச்
சலைக் கேட்கவும் காலம் வந்ததே!
என்ன செய்வேன்' என்று அந்த
அம்மையும் ஏங்கிவருந்தினுர். பர்த்தா
வைப் போலவே பத்தினியும் ஒத்த
எண்ணமுள்ளவராய் இருந்தார்.
இவர்கள் வருந்திப் பயனென்ன?
வழியொன்றுமில்லையே; எனினும்,
கெட்டாலும் மேன்மக்கள் மேன்
மக்களல்லவா? செல்வம் கெட்ட
போதும் இவர்களது கல்வியறிவும்
ஜீவகாருண்யமும் கெட்டுவிடுமா?
ஒருபோதுமில்லை. ஆகவே, பெண்
ணே, என்ன செய்யலாம் என்ருர்
காளத்திப் பிள்ளை. பெண் என்ன
செய்வாள். தன் கழுத்தில் உள்ள
தாலி ஒன்று தவிற மற்றெல்லா
மிழந்த மகராசியாச்சே. "நாதா!
தாலி ஒரு பொருள் தவிற
வேருென்று மில்லையே" என்ருள்.
வித்துவானே நம்மை நம்பி வந்து
விட்டார். தன்னை நெடுநாள் பகைத்
திருந்த தரித்திரத்தோடு வாதுகூறி
வீரம்பேசுவரும்நம்முடையபலத்தை
நம்பியே ஏதோ பிரபந்தம் பாடி வரு
கிருர் போலிருக்கிறது. விடிந்தால்
அவர் நமது ஊருக்குக் கட்டாயம்
போய்ப் பார்ப்பார். அங்கு நாம்
இல்லாதது தெரிந்தால் வயிரெரிந்து
போவாரே. இவரை அங்கே உப
சரித்து ஒருவேளை அன்னமிட்டா
வது அனுப்பினுல் நன்ருயிருக்குமே.
அதற்கும் நம்மிடத்தில் வழியில்லை
யே என்று காளத்திப் பிள்ளை விச
னித்தார்.

அது கண்டு அவருடைய மனைவி, நாதா! என் கழுத்தில் கிடக்கும் தாலியை விற்றாவது சரிபடுத்தலாம், வாருங்கள் போவோம் என்று கூற, இருவரும் அப்பொழுதே புறப்பட்டுத் தம்மூர் சென்று, விடிந்தவுடன் தாலியைக் கழற்றி விற்று சாமான்கள் வாங்கி வைத்துக் கொண்டு வித்துவானை எதிர்பார்க்கலாயினர். வித்துவானும் வந்து சேர்ந்தார். வீட்டில் புன் சிரிப்புடன் வந்து நுழையும்விருந்தினர்க்கு அவ்வீட்டில் குடி கொண்டிருக்கும் விசாரம் தெரிகிறதா? காளத்தி பிள்ளையின் கஷ்டத்தை இவர் கண்டாரா? ஆனந்தமாய்த்தான் காளத்திப் பிள்ளை மீது பாடி வந்த பிரபந்தத்தையும் படித்துக் காட்டினார். ஸ்நான முதலியனவும் நடந்தன. சாப்பாடும் முடிந்தது. கூடத்தில் வந்து உட்கார்ந்தார்கள். பிரபந்தம் பாடிய வித்வானுக்கு இனி மரியாதை செய்ய-வேண்டுமே! காளத்திப் பிள்ளை இப்பொழுது என்ன செய்வார்? விழிக்கிறார். யோசிக்கத் தொடங்கினார்: ‘இதற்கென்ன செய்யலாம், இவரோ நம்மை நம்பி வந்துவிட்டார். வறுமையால் மிக மெலிந்திருக்கிறார் என்றும் தெரிகிறது. நமது கையிலோ ஒன்றுமில்லை. இல்லையென்று சும்மா அவரை அனுப்புதலும் கூடாது. அதைவிட நம் உயிரை விடுவதே நல்லது’ என்று கருதி “இருங்கள், வருகிறேன்,” என்று சொல்லிவிட்டு வீட்டினுள் நுழைந்தார். தனக்குப் பரிசு கொணரப் போயிருக்கிறார்; குறைந்தது ஐந்நூறு ரூபாயாவது வரும், ஏனென்றால் தக்க பிரபுவன்றோ இவர்; பார்ப்போம்’ என்று எதிர்பார்த்தவண்ணம் இருக்கிறார் வித்வான். உள் நுழைந்த பிள்ளையவர்களோ கொல்லை பக்கமாய்ப் போய் அங்கிருந்த ஓர் பாம்புப்புற்றில் கையை விட்டு, ‘ஏ! சர்ப்பமே! நான் பரம தரித்திரனாய் விட்டேன். இல்லையென்று இரந்து வந்தோர்க்கு இல்லையென்று சொல்லும் ஏழ்மையில் நான் இருப்பதை விட இறப்பதே நலமென்று கருதுகிறேன். நீ தயவு செய்து என்னைக் கடித்துக் கொன்று விடுவாயானால் என் துன்பமெல்லாம் இன்றோடொழியும்’ என்று கதறினார்.

“கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே” என்பது பொய்யாகுமா? சற்று நேரத்துக்குப் பின் தன் கையில் ஏதோ ஒரு பொருள் இருப்பதாக உணர்ந்து கையை மேலே எடுத்தார். அப்பொருள் நாகரத்தினமாக இருந்தது. அவருக்குண்டான சந்தோஷத்திற்கு அளவில்லை. உடனே அங்கிருந்து ஓடோடியும் வந்து, தாம்பூலத்தில் அந்த ரத்தினத்தை வைத்து வித்துவானிடம் கொடுத்தார். அதனைக் கண்ணுற்ற வித்வான் கொண்ட மகிழ்ச்சியைக் கூற யாரால் கூடும்? அவர் சத்திரத்தில் கூறியபடியே தரித்திரமும் “நீ யெங்கே நானெங்கே” என்று ஒழிந்தது. வித்துவான் இரத்தினத்தை வாங்கிக் கொண்டு புறப்பட்டார். அதை விற்க வேண்டுமே, வாங்கத் தகுந்த நபர் அரசனே என்று கருதி, அவ்வூர் அரசனிடம் கொண்டு போய்க் காட்டினார். அவ்வரசன் ‘இது உமக்கு எப்படிக் கிடைத்தது?’ என்றான். வித்துவான் ‘இதை எனக்குக் காளத்திப்பிள்ளையவர்கள் கொடுத்தனர்’ என்று பதிலுரைத்தார். இதை கேட்ட அரசன், காளத்திப்பிள்ளை இன்னும் இவ்வித இரத்தினத்தைத் தரத்தக்க செல்வனோ என்று ஐயுற்று



வித்வானைப் பயமுறுத்தி, ‘இது நம்முடைய அரண்மனையில் இருந்தது. காளத்திப்பிள்ளை திருடினான் போலும்; அவனைக் கொண்டு வாருங்கள்’ என்று ஆள் அனுப்பி கொணர்ந்து அவரைக் கேட்க, அவர், அது தமக்கு வந்த விதத்தை உரைத்தார். அதை அரசன் நம்பாமல் ‘அங்ஙனமாயின் அந்த நாகம் இன்னொரு முறை நீ போய் கேட்டால் தனது ஜீவரத்தினத்தையும் கொடுக்கலாமே? அப்படிக் கொடுத்தால் நீ சொல்லுவது உண்மையென்று நம்பலாம்? என்றான். பிள்ளையவர்கள் அதற்குடன் பட்டு “கொடுங்கோல் மன்னர் வாழும் நாட்டிலும் கடும்புலி வாழும் காடு நன்றே” என்றெண்ணி, இவன் கண்பட வாழ்வதினின்றும் இறந்து படுவதே உத்தமம் என்று கருதி அப்படியே பாம்புப் புற்றிலேயே போய் சர்ப்பமே! இம்முறையாவது தயவு செய்து என்னை கட்டாயம் தீண்டிக் கொன்று விடு; அரசன் எனக்கு இவ்விதம் கட்டளையிட்டிருக்கின்றான் என்று கண்ணீர் வடித்தார். சற்று நேரத்தில் ஜீவரத்தினம் கையில் விழுந்தது. அதைக் கொண்டு வந்து அச் சண்டாள அரசனிடம் கொடுத்தார். அரசனும் ஆச்சரியப்பட்டான். அவனுக்குப் பிள்ளையவர்களிடத்தில் அச்சமும் அன்பும் வந்தது. ‘நீயே செல்வன், நீயேஜீவகாருண்யச் சீமான், நீயே கற்றதனாலாய பயனடைந்தோன். உனக்கு நான் இணையல்லேன், உன்னிடம் நான் அபகரித்த செல்வமெல்லாம் இதோ தந்தேன் பெற்றுக்கொள். நீ விரும்பியபடி முன்போல் உன் கொடைத் தொழிலைத் தொடர்ந்து செய்வாயாக. மேலும் உனக்கு வேண்டும் உதவிகளையும் யான் செய்வேன். நான், கல்வியிற் கொடையிற் சிறந்த தங்களைப்பழித்தும் துன்பமடையச் செய்தும் வந்ததற்காக மன்னித்தருளல் வேண்டும்.” என்று வேண்டினான். அவ்வித்வானுக்கும் வேண்டிய திரவியம் கொடுத்தனுப்பினான்.

பிள்ளையவர்கள் கொண்ட கல்வியின் அவா முடிவில் எவ்விதநன்மையளித்த தென்பதை நோக்கின், கல்வியின் பெருமை நன்கு விளங்குமன்றோ. ஆதலின் கல்வி கேள்விகளாலும் அதன் மூலம் ஏற்படும் சொந்த ஆராய்ச்சியினாலும் ஏற்படும் அறிவும், அதற்குத் தகுந்த ஒழுக்கமும் முடிவில் நன்மையே பயக்குமென்பதில் சந்தேகமேயில்லை? இங்ஙனம் கல்வியின் பயன் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் கண்டுணர்ந்துய்யவல்லதாயிருக்கிறது. எனவே, ஆண்டவன் நம்மவரைக் கல்வியில் முன்னேற்றமடையச் செய்வானாக; கற்றோர்க்குக் கௌரவமும் உதவியும் செய்ய நமக்கு அறிவூட்டுவானாக.

**CHILDREN'S PAGE:**

# உண்மையுள்ள சிறுவன்.

பன்னிரண்டு வயதுடைய சிறுவன் ஒருவன் இரண்டு பெரிய கொய்யாப் பழங்களை எடுத்துக்கொண்டு ஒரு சத்திரத்தண்டை விற்க வந்தான். அங்கு இரண்டு பிரபுக்கள் திண்ணைமீது உட்கார்ந்து கொண்டிருந்தனர். அவர்களுக்கு அவன் வணக்கம் செய்தான். அவர்கள் சிறுவனை நோக்கி, ‘என்ன தம்பீ வேண்டும்?" என்று கேட்டார்கள். சிறுவன், "ஐயா! நான் ஒரு எழைச் சிறுவன். நான் கொய்யாப்பழம் விற்று ஜீவிக்கிறேன். இதோ என்னிடமிருக்கும் இவ்விரண்டு கொய்யாப்பழங்களையும் நீங்கள் வாங்கிக் கொள்ளுங்கள். இவற்றின் விலை இரண்டணா தான். நீங்கள் இரண்டணா கொடுத்தால் எனக்கு உணவு கிடைக்கும். இன்றேல் யான் பட்டினி கிடக்க நேரிடும்; என்றான்.

சிறுவன் கூறியவற்றைக் கேட்ட அப்பிரபுக்களில் ஒருவர் அவனைப் பார்த்து, "தம்பீ!, எங்களுக்குக் கொய்யாப்பழங்கள் வேண்டாம். இரண்டணா கொடுக்கிறோம். நீ வாங்கி பசியாற்றிக்கொள்" என்றார். சிறுவன், அவரை நோக்கி, "பாவா! என் பழங்களைப் பெற்றுக்கொண்டு இரண்டணா கொடுங்கள். என்னிடமிருந்து ஒன்றும் வாங்கிக் கொள்ளாமல் எனக்குப் பணம் கொடுத்தால் நான் வாங்க மாட்டேன். தயவு செய்து இப்பழங்களைப் பெற்றுக்கொண்டு பணம் கொடுங்கள்" என்று வேண்டினான்.

பிரபு சிறுவனது அறிவைக் கண்டு மகிழ்ந்தார். பிச்சை கேட்டு வாங்கிப் பிழைக்காமல், அவனால் இயன்ற வியாபாரத்தைச் செய்து அவன் உயிர்வாழ வேண்டும் என நினைக்கிறான் என்ற அறிவை வியந்தார். அவர், ‘தம்பீ! என்னிடம் சில்லரையில்லை. ஒரு முழு ரூபாய் இருக்கிறது" என்றார். பையன், "பாயீ! நான் அந்த ரூபாய்க்குச் சில்லரை மாற்றிக்கொண்டு வருவேன். தாங்கள் என்னை நம்பலாம். நான் விரைவில் மாற்றிக்கொண்டு வருவேன்" என்று சொன்னான்.

பிரபு அச்சிறுவனிடம் ரூபாயைக் கொடுத்தார். சிறுவன் சென்றான். கால்மணி நேரமாயிற்று; அரை மணி நேரமாயிற்று. சிறுவனைக் காணோம். பிரபுக்கள் இருவரும் ஆத்திரங்கொண்டனர்; பையன் தங்களை ஏமாற்றி விட்டதாகவே எண்ணினார்கள்.

அன்றிரவு சுமார் பத்துமணி இருக்கும். எட்டு வயதுடைய சிறுவன் ஒருவன் அப்பிரபுக்கள் இருந்த இடத்திற்கு ஓடிவந்தான். அவன் அவர்களைப் பார்த்து, "நீங்கள் உங்களுக்குக் கொய்யாப்பழம் விற்ற பையனிடம் ஒரு ரூபாய் கொடுத்தீர்களா?" என்று கேட்டான். அவர்கள் ஆச்சரியம் அடைந்து, "ஆம் நீயார்?" என்று கேட்டார்கள். சிறுவன், "ஐயா, நான் அவனுடைய தம்பி. என் அண்ணன் உங்கள் ரூபாய்க்குச் சில்லரை மாற்றச் சென்றபோது, மோட்டார் வண்டியில் அகப்பட்டுக் கொண்டான். அவனுடைய கால் முறிந்து விட்டது. அவனைச் சிலர் வண்டியில் போட்டு எங்கள் வீட்டிற்குக் கொண்டு வந்தனர். வந்தவுடன் அவன் தங்களிடம் பதினான்கணா கொடுக்கும்படி அடையாளம் சொல்லியனுப்பினான். தாமதம் உண்டானதால் அவனைத் தாங்கள் மன்னிக்க வேண்டும் என்றும் சொல்லச் சொன்னான்' என்று கூறிப் பணத்தைக் கொடுத்தான்.

பிரபுக்கள் இருவரும் சிறுவனுடைய நன்னடக்கைக்கு வியந்தனர். அவர்கள் வந்த சிறுவனோடு அவன் வீட்டை அடைந்து, காயம் பட்டுக் கிடக்கும் பையனைப் பார்த்தார்கள். அவர்கள் அவன் பக்கத்திலேயே இருந்து, அவனுக்கு வேண்டிய சிகிச்சைகள் செய்தார்கள். பையன் சில நாட்களில் சுகமடைந்தான். அநாதைச் சிறுவர்களான அவ்விரண்டு பிள்ளைகளையும் இரண்டு பிரபுக்களும் தங்கள் பிள்ளையைப் போலக் காப்பாற்றி வளர்த்து வந்தார்கள். ‘உண்மையுடையவர்களாய் நடந்து கொண்டால், உயர்வை அடையலாம்' என்பதை, நீங்கள் இக்கதையிலிருந்து அறிந்து கொள்ளல் வேண்டும்.

# கலம்பகம் News & Notes.

## பெரியவிடத்து விவாகம்
## Wedding in High Circle

நமது மிகப்பழைய சிறந்த நண்பரும் "நூ. இ." பேராதரவாளரும், பெரிய உபகாரியும், ராணிப்பேட்டையிலும், சென்னைப் பெரியமெட்டிலும் உள்ள பிரபல தோல் வியாபாரத்துக்குச் சொந்தக்காரருமா யிருப்பவருமான ஆலீ ஜனாப் A. M. மவுலவீ ஆதம் முஹ்யித்தீன் சாஹிபு அவர்களின் மூத்த புதல்வர் ஜனாப் முஹம்மது தமீம் சாஹிபுக்கும், சேர்மன் ஜனாப் செ. ஹாபிஸ்முஹம்மது அப்துல்லா சாஹிபு அவர்களின் இளைய புதல்விக்கும், மணமகள் இல்லத்தில் இராணிப்பேட்டையில் (25-10-42-ல்) நிகாஹ் என்னும் திருமணம் மிகமிகச் சிறப்பாக நடந்தேறியது கண்டுமிக்க மகிழ்ச்சி யடைகிறோம். உள்ளூரிலிருந்தும் வெளியூர்களி லிருந்தும் பல பிரமுகர்களும் ஏராளமாக விஜயஞ்செய்திருந்தனர். மணமக்களுக்குப் பலவிதமான பரிசுகளும் வழங்கப்பட்டன. ஹிந்துக்களும், முஸ்லிம்களும் இவ் விவாகத்தில் சந்தோஷத்துடன் வந்து கலந்துகொண்டனர். எல்லாம் வல்ல இறைவன் சிறப்பிற்குரிய இச்செல்வ மணமக்களுக்கு நீண்ட நோயற்ற ஆயுளும், குறைவற்ற நற்செல்வமும், நற்புகழும், நற்புத்திரர்களும், மற்றும் சகல நன்மைகளும் கொடுத்து நல்லருள் புரிவானாக. அக்குடும்பத்தார்கள் அனைவரும் ஆண்டவனருளால் எல்லா நன்மைகளும் அடைவார்களாக.

(ஹாபிஸ் பாகவீ, ப-ர்.)

## குர்ஆன் ஷரீப் கற்பித்தல்
## Teaching Holy Quran

By

முன்ஷீ எம். ஏ. பிஜ்லீ, தாராபுரம்

உலகம் மின்சார வேகத்தோடு ஓடுகிறது. நீரிலும் நிலத்திலும் மிதந்த மனிதன் ஆகாயத்தில் மிதக்குகிறான். நாடுகள் போரில் வாபசாகுவது ஏன்? அதனிடம் ஆகாய விமானங்கள் அதிகமாக இல்லை.

தமிழ், தெலுங்கு, மலையாளம், ஆங்கிலம் முதலிய பாஷைகள் கற்றுக் கொடுப்பதன் முறை வருஷா வருஷம் புதிது. மாடல் பள்ளிக்கூடங்கள் (Model Schools) வைத்து மாணவர்களின் மூளையை அறிந்து பெருங் கல்வியைச் சுருங்கிய நாட்களில் கற்றுக் கொடுக்கப்படுகிறது.

குர்ஆனும் போதிக்கப் படுகிறது. அதன் பாஷை அரபி. கற்பிப்பது பாஷை ஞானம் அல்ல; அரபியை வாசிப்பதுதான் (only reading).

ஒரு பாஷையை அறிய அதிக நாட்களாகலாம். வாசித்துப் பழக சில நாட்களே போதும். தமிழன், தெலுங்கையோ, மலையாளத்தையோ பதினைந்து நாட்களில் வாசித்துப் பழகி விடலாம்.

மாணவ மாணவிகளின் வாழ் நாட்கள் அதிசூன்யம். குர்ஆன்(அரபி பாஷை) வாசித்துப் பழக மட்டும் இரண்டு அல்லது மூன்று வருஷங்களை ஏன் இழக்கவேண்டும்? "போதனை முறை" இல்லை. 200 வருஷங்களுக்கு முன்னால் போதித்த முறையே இன்னும் அனுசரிக்கப் படுகிறது. ஏன் சீரிய முறையில் மாற்றி அமைக்கக் கூடாது?

தமிழ்நாட்டில் மதக்கல்லூரிகளில் குர்ஆன் ஷரீப் போதிக்க மாடல் வகுப்புகள்(Model Classes) நடத்த வேண்டும். ஒரு மாதத்திற்குள்ளேயே கற்கும் போதனை முறையை சிருஷ்டிக்க வேண்டும். அரபி உபாத்தியாயர்களுக்கு குர்ஆனை வாசித்துப் பழக்குவது (Training of Teaching the "Holy Quran") எப்படி என்று டிரெய்னிங் கொடுக்க வேண்டும்.

தமிழ் நாட்டிலேயே இஃது ஒரு பெரிய இயக்கமாகவேண்டும். இதில் மதக்கல்லூரிகளெல்லாம் பங்கு எடுக்கவேண்டும்.

அதன் முடிவு:—தவழும் உணர்ச்சி தாவி ஓடுவதாகும். மாணவ மாணவிகள் அரபியை "வாசிக்கக்" கழித்த அதே இரண்டு அல்லது மூன்று வருஷங்களில் அரபி பாஷையையே நன்கு "அறிந்தும்" கொள்வதாகும்.

## ஒரு மார்க்க வினா.
## A Religious Question

வினா:—"கொப்புளிப்பான், வைசூரி, சிறியம்மை, பப்புளை, சராம்பு (ஜுத்ரி, வபா, தாஊன்) போன்ற அம்மை நோய்கள் உண்டான வீடுகளில் அந்நோய் தீரும்வரை ஆண்டவனைத் தொழவோ, எல்லாம் அமைந்துள்ள திருவேதமாம் குர்ஆனை ஓதவோ, ஹதீதுகள் மற்றும் கஸீதாக்கள்முதலிய யாதொன்றும் எழுதவோ படிக்கவோ வீடு வாசல்களைச் சுத்தமாய் வைக்கவோ கூடாதாம். இப்படி ஏதும் நடைபெறின் தாய்மார் அம்மார் என்ற யாரோ கோபங்கொண்டு விடுவதால் அந்நோய் அதிகரித்து விடுமாம். இதற்காகவே அவ்வீடுகளை அழுக்காகவும் நாற்றமாகவும், தொழுகை குர்ஆன் ஹதீது இஸ்லாம் மார்க்க நடைமுறை யில்லாமல் வீடு சுற்றிலும், மாமிசம் சுத்தம்செய்த நாற்றத்தண்ணீரை ஊற்றியும் வீட்டுக் கூரையில் மாட்டு எலும்பு முதலியவற்றைத் தொங்க விட்டும் வீட்டைப் பாவிக்க வேண்டுமாம். இக்கொள்கையினால் வணக்கம் புரிபவர்களுக்கு அனேக இடைஞ்சல் ஏற்படுகிறது." இப்படியெல்லாம் நடக்க முற்படுகிறவர்கள் இஸ்லாத்தை விட்டு எவ்வளவு தூரம் நீங்கி விடுகிறார்கள் என்பனவற்றை விபரமாய் விளக்கவும்.

(சந்தா நெ. M. 56.)

விடை:—வினாவில் கண்ட நோய்களும் ஆபத்துக்களும் தோன்றுகின்ற சமயத்தில் அது முடியும் வரை, அல்லாஹ் ஆண்டவனைத் தொழுவதும் அவன் குர்ஆன் ஓதுவதும் தவறாகும் எனக் கூறுவது அவிவேகமாகும். அன்றியும் இஸ்லாத்தின் அஸ்தி பாரத்துக்கே முரண்பட்ட எண்ணமுமாகும். பின்னர் பிரஸ்தாப ஸ்தலங்களைப் பரிசுத்தமாய் வைத்துக்கொண்டிருக்க வேண்டியது அத்தியாவசியமாய் அமைந்திருக்க, அஃது கூடாதெனக் கூறுவது அதிகப்படியான அறிவின்மையின் கூற்றேயாகும். மக்கள் அசுத்தமா யிருப்பது கூடாதென்றும், எப்பொழுதும் பரிசுத்தமா யிருக்கப் போதியவரை பிரயத்தனப்படல் வேண்டுமென்றும், நாயகம் ரசூல் (ஸல்) அவர்கள் வாக்கியங்கள்தாமென்ன, எமது வேதமாம் குர்ஆன் ஷரீபும் நன்கு வற்புறுத்திக்கொண்டே யிருக்கின்றது. மேலும் வினாவில் கண்ட அனாச்சார அசுத்தமான செய்கைகளுக்கு இஸ்லாத்தில் ஆதாரமோ அனுமதியோ இருக்கிறதென்று எவரும் கூறத் துணியமாட்டார் என்பதே எமது திடமான எண்ணம். மனிதன் வாசஞ்செய்யும் குறிப்பிட்ட ஓர் ஸ்தானத்திலிருந்து கொண்டே உலகத்தில் நடக்கும் உன்னதமான ஆச்சரியங்களையும் வினோதங்களையும், நன்மையும் நேர்மையுமான விஷயங்களையும் தெரிந்துகொள்ள சாதனங்க ளமைந்துள்ள இச்சமயத்திலுங்கூட, இஸ்லாத்தைப் பின்பற்றி நிற்கிறோமென்று கூறிக்கொள்ளும் மக்களுள் ஒரு சிலர் இத்தகைய எண்ணங் கொண்டவர்களா யிருப்பின் அவர்களுக்காகவும் அவர்களுடைய கேவலமான அறியாமைக்காகவும் நாம் இரங்காமலிருக்க முடியவில்லை.

(ஹாபிஸ் பாகவீ)



## மருகர் மறைந்தார்

தூத்துக்குடியில் பெரிய பிரபல உப்புமண்டி வர்த்தகரும், ஜனோபகாரியும் பரோபகாரியும், நமது ஆப்த நண்பர் பெரியாரும், 'நூ.இ.'த்தின் பெரிய ஆதரவாளருமான ஆலீஜனாப் S. K. M. காதர்மொஹிதீன் தரகனார் & பிரதர்ஸ் அவர்களின் அருமை மருகனார் S. K. S. O. உதுமான் பிள்ளை தரகனார் அவர்கள், எதிர்பாராதவிதமாய் ஆண்டவனுலகெய்தியதைக் கேட்டு அதிக துக்கத்துள் ளாழ்ந்தோம். நல்லெண்ணமும் பெரிய உபகார சிந்தையும் உள்ளவர்களுக்கு இம்மாதிரி சோதனையை ஆண்டவன் கொடுப்பது 'எல்லாம் அவனுடைய செயல்' என்று சொல்லுவதைத் தவிர வேறு ஒன்றும் சொல்வதற்கில்லை. மறைந்த அம்மருகனாரின் ஆன்மாவுக்கு இறைவன் நற்சாந்தி யளிப்பானாக. அவரின் மறைவால் ஏற்பட்ட நஷ்டத்துக்கு அளவில்லை. அவர் குடும்பத்தாருக்கும் அவரின் மறைவால் அதிகம் வருந்துவோருக்கும் எமது ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம். (ஹாபிஸ் பாகவீ; ப-ர்.)

## அம்மையின் மறைவு

கொழும்பில் மிகப் பழைய கால பிரபலடீ எஸ்டேட் வியாபாரிகளும், தூத்துக்குடி திருநெல்வேலி பிரபல வியாபாரிகளும் நமது அதிக ஆப்த நண்பர்களும். 'நூ.இ.'த்தின் சிறந்த போஷிப்பாளரும், நன்மையான காரியங்களுக்குப் பொருட்படுத்தாமல் எவ்வளவும் எத்தனை தடவையும் உபகாரம் செய்யக்கூடிய தயாளகுண சீலர்களுமான, ஆலீஜனாப்களான சோதரர்கள் A.E.M. யூசுப் & மதார் மரைக்காயர் அவர்களின் அருமைச் சோதரியார் அவர்கள், 21-10-42-ல் சாத்தன்குளத்தில் பிரசவ காரண

மாய் ஆண்டவனுலகம் எய்தியது கேட்டு அளவற்ற துக்க மடைகிறோம். இவ்வம்மையார் நற்குணமும், கல்வியும், பரோபகார சிந்தையும் கொண்டவர்கள். இவர்களின் மறைவால் வருந்தும் ஏனையோருக்கும் ஷை சோதரர்களுக்கும் எமது ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம். எல்லாம் வல்ல இறைவன் அவ்வம்மையாரின் ஆன்மாவுக்கு நற்சாந்தி யளிப்பானாக.

(ஹாபிஸ் பாகவி, ப-ர்.)

இஸ்லாமிய உலக ஜனத்தோகை
(சமீபத்திய கணக்கு)

Muslim Population in the world (latest record).

உலகத்திலுள்ள பலவித மக்களின் எண்ணிக்கையை 10 வருடத்துக்கொருமுறை கணித்துவரும் " லீக் ஆப் நேஷன்ஸ் " தனது ரிப்போர்டில் முஸ்லிம்களின் ஜனத்தொகையை அடியிற்கண்டவாறு எடுத்துக் காட்டியிருக்கிறது :—

| | |
|---|---|
| வட ஆப்பிரிக்கா | 294,680,000 |
| தென் & மத்திய ஆபிரிக்கா | 9,280,000 |
| கிழக்கு ஆபிரிக்கா | 9,257,000 |
| கீழ் ஐரோப்பா | 7,102,000 |
| சோவியத் ரஷ்யா | 13,225,000 |
| மத்திய & கிழக்கு ஆசியா | 31,225,000 |
| இந்தியா (புதிய கணக்குப்படி சுமார்) | 99,718,504 |
| மலாய் நாடுகள் | 3,034,092 |
| சீனு | 49,800,000 |
| ஜாவா, போர்னியோ அருகிலுள்ள தீவுகள் | 95,985,000 |
| மற்ற நாடுகள் | 15,803 |
| | 613,322,399 |

மேற்கண்ட கணக்குப்படி பார்த்தால் உலகத்திலுள்ள, ஜனத்தொகை மொத்தம் 185 கோடி என்றால், அதில் மூன்றில் ஒரு பங்கு (61 கோடி) முஸ்லிம்களாகவே யிருக்கின்றனரென்பது தெளிவாக விளங்குகிறது. இதனாலேயே இஸ்லாத்தின் ஜோதி உலகெங்கும் பரவியிருக்கிறதென்பது வெள்ளிடைமலை. [1941ஞு மேமீ 31உ வெளியான 'டான்' பத்திரிகையில் 5-வது பக்கத்தில் உலக முஸ்லிம்களின் ஜனத்தொகை 30 கோடி எனப் பிரசுரித்திருந்ததாம். அதையே சென்னை 'டெக்கான் டைம்ஸ்' பத்திரிகையும் சென்ற ஜூன் 14உ இதழில் பிரசுரித்திருந்ததாம். இஃது சரியான கணக்கல்லவென விளக்க ஒரு முஸ்லிம் நண்பர் மேற்கண்ட ரிக்கார்டை வெளியிட்டுள்ளார்.]

காயிதே ஆஜம்
ஆரம்பித்த 'டான்' (வாரப்பதிப்பு)
இனி தினசரியாகும்

" The Dawn to be Daily "

காயிதே ஆஜம் அவர்களின் அறிக்கைகளையும், சொற்பொழிவுகளையும், அகில இந்திய முஸ்லிம் லீகின் கொள்கை, நியாயம், பிரசாரம், தன்னம்பிக்கை, நாணயமான போக்குகள் முதலிய யாவற்றையும் உலகமெல்லாம் உண்மையாக எடுத்துரைக்கவே காயிதே ஆஜம் அவர்களால் ஆரம்பிக்கப்பட்ட பத்திரிகையாகும் 'டான்' வாரப்பதிப்பு. (இந்துப் பத்திரிகைக்காரர்களும், ரிப்போர்டர்களும் ஒரே தினுசாகத் தமது சொற்களையும் லீகின் நடவடிக்கைகளையும் அடிக்கடியும் மறைத்தும், திரித்துக் கூறியும் வந்ததை அனுபவத்தில் கண்டறிந்து அதைக் கெல்லவே லீகுக்காக ஒரு நேர்மையான பத்திரிகை வேண்டும், அதன் வாயிலாக உலகம் பூராவுக்கும் லீகின் உண்மைகளை எடுத்தோத வேண்டுமென்றே இதை ஜனுப் ஜின்னுஹ் அவர்கள் ஆரம்பித்து வைத்தார். ப-ர்.) இப்பொழுது பத்திரிகை நிருபர்களோ, பிரஸ் சர்விஸ்களோ எவரும் முன்போல் தாம் நினைத்தபடி நடந்துகொள்ள இயலவில்லை. அதற்குப் பதிலாக காயிதே ஆஜம் அவர்களின் அறிக்கைகள், சொற்பொழிவுகள், லீகின் நடவடிக்கைகள் முதலியவற்றை அறவே பிரசுரிக்காமலும், பிரசுரித்தாலும் முக்கியமானவற்றை விட்டுவிட்டுத் தமக்கனுகூலமானவற்றை பிரசுரிப்பதுமாயிருக்கிறார்கள். இதற்கு மறுப்புக்கள் அனுப்பினுலும் எவரும் போடுவதுமில்லை. எனவேதான் இன்று " டானை " தினசரியாக்கிவிட்டால், அன்றன்றும் விஷயங்களைத் தெளிவுபடுத்தவும், முஸ்லிம் லீக் கோரிக்கைகளையும் நேர்மையான வழி காட்டுதல்களையும் முஸ்லிம்கள் பின்பற்றி நடக்க ஏதுவாயிருக்கவும் கூடும் என்றே முடிவு கட்டி இதில் இறங்கி விட்டார்கள். லீக் காரியதரிசி ஜனுப் லியாகத் அலீகான் அவர்கள், " டான் " வாரப்பதிப்புக்குப் பெரிய மதிப்பும், செல்வாக்கும், ஒப்பற்ற ஆதரவும் இருந்து வருகிறதென்றும், அதன் காரணமாகவே, இந்தச் சமயம் எவ்வளவு கஷ்டமான காலமாயிருந்தும்கூட தாம் 'டானை' தினசரியாக்கத் தீர்மானித்து விட்டதாகவும் மிகச் சந்தோஷத்துடன் அறிவிக்கின்றார். அதைக் கேட்டு வட இந்திய முஸ்லிம்கள் அனைவரும் பெருஞ் சந்தோஷ மிகுதியால் அவரைவிட இன்னும் அதிக சந்தோஷ

## நண்பர்கள் கவனிக்க

யுத்த காலத்திலேயே ஜனனமான தங்கள், 'நூருல் இஸ்லாம்' இத்துடன் தனது மூன்றாவது வயதைப் பூர்த்தியாக்குகிறது. அடுத்தபடி, நான்காம் வயதில் அடி வைக்கவும் போகிறது. இதனால் பயனடைந்தவர்கள் பலரிருப்பர். பார்க்காமலே யிருந்துவிட்டவர்களும் சிலர் இருப்பர். 0-2-0க்குக் கிடைத்த காகிதம் ரூ. 1-10-0 கொடுத்தும் கிடைக்காமலிருப்பினும், இதுகாறும் எண்ணத்தொலையா எத்தனையோ சங்கடங்களுக்கெல்லாம் ஆளானதன் பின்னும், தங்கள் 'நூருல் இஸ்லாம்' வயதுக்குத் தக்க முறையில் தங்களிடம் வந்து விஷயத்தைக் கூறிக்கொண்டேதாமிருக்கும் என்பதை நம்பலாம். இத்துடன் இதன்பாலுள்ள தங்கள் நல்லெண்ணமும் வளரவேண்டுமென்பதே எமது பேரவா. வஸ்ஸலாம்.

(ஹாபிஸ் பாகவீ.)

மாக 'டான்' தினசரியை வரவேற்கின்றனர். 'டான்' தினசரி வாழ்க!

[ஆனால், நமது தமிழ் நாட்டுச் சோதரர்கள் ஒன்றும் கவனியாமலிருப்பதை என்னென்றுரைப்பது? இந்த நூ. இ. மாசிகையை வாரப்பதிப்பாக்க வேண்டுமென்று எவ்வளவு எடுத்துச் சொல்லியுங்கூட அவர்களுக்குக் கவலையில்லை. உண்மையானவர்கள் உழைக்க முன்வந்தாலும் அவரை ஆதரிப்பாரில்லை யென்பது நம் சமூகத்தின் துரதிஷ்டமா? வரவர சமயம் நெருக்கடியாக யிருப்பதால் இன்னுங்கூட முஸ்லிம் சகோதரர்கள் சந்தேகத்திலும் தூக்கத்திலுமிராமல் ஆண்டவன்மீது நம்பிக்கை வைத்து நல்லெண்ணமுடன் "நூருல் இஸ்லாத்"தை ஆதரிக்க முன் வந்தால், வடக்கே 'டான்' தினசரியாகும் சமயம் தெற்கே "நூருல் இஸ்லாம்" இணையற்ற வாரப்பதிப்பாகி விடுமென்பதில் ஐயமேயில்லை. தாமதம் வேண்டாம். உடனே உங்கள் ஆதரவைத் தர முடிவு செய்யுங்கள். உங்கள் மனத்தில் இருப்பதை எமக்கு எடுத்துரையுங்கள். யோசனை கூறுங்கள், ஆவன செய்யுங்கள். எப்படியோ நம் சமூகம் பிறர் காலடியில் மிதிபடாமல் மானமுடன் வாழ வேண்டுமென்பதே எமது பேரவாவும், தினசரிப் பிரார்த்தனையு மாகும். ப-ர்.]

## 'டாங்கிக்கு பெயர் வந்த வேடிக்கை'

## How 'Tank' got its name.

தற்போது யுத்தத்திலே பிரமாதப்படும் யந்திர பூதங்களுக்கு 'டாங்கி' என்று பெயர் வந்த விதத்தை மேஜர் பால்சி சரபோர்க் தம்முடைய புத்தகத்தில் கூறுகிறார்:

முதல் முதலாக பிரிட்டிஷார் தான்முதல் உலகயுத்தத்தின்போது டாங்கிகளைக் கட்டினார்கள். இதை பரம இரகசியமாகச் செய்தார்கள். இதில் ஈடுபட்ட தொழிலாளர்களுக்குக்கூட ஏன் இதைக் கட்டுகிறார்கள் என்று தெரியாது. எகிப்திலுள்ள பெரிய தண்ணீர்க் கிடாரங்களை ஏற்றிச் செல்வதற்காகத் தான் இந்த யந்திரங்களைச் செய்ததாகக் கூறப்பட்டது. இவை சம்பந்தமான தஸ்தவேஜுகளிலெல்லாம் தண்ணீர் கொண்டு போகும் ஏனம் என்றே இதைக் குறிப்பிடப்பட்டது. இதிலிருந்து என்ன ஆயிற்றென்றால் தொழிற்சாலைகளில் வேலை செய்பவர்கள் சுருக்கமாக 'டாங்கி' என்று இதைச் சொல்லலானார்கள். இந்தப் பெயரே அதற்கு நிலைத்து விட்டது; எல்லா நாடுகளிலும் இந்தப் பெயரையே உபயோகிக்கின்றனர்.

## பள்ளி மாணவர்க்கு விமானப் பயிற்சி

## Air-drive taught to students.

அமெரிக்காவில் வெடி விமானங்களும், சண்டை விமானங்களும், டார்பிடோ விமானங்களும், பிரமாண்டமான சரக்கேற்றி விமானங்களும் கணக்கு வழக்கு இல்லாமல் தயாராகி வருகின்றன. சீக்கிரத்திலேயே மாதம் 10,000 விமானங்கள் வீதம் தயாராக்கக்கூடும்.

விமானங்கள் மட்டுமிருந்து ஆளில்லாவிட்டால் என்ன பிரயோசனம். இதனால்தான் 20 லட்சம் சிறுவர்களுக்கும் சிறுமிகளுக்கும் கூட இன்னும் ஒரு வருஷத்திற்குள் பிரதம பறக்கும் பயிற்சி சம்பந்தமான விஷயங்கள் உயர்தரப் பள்ளிப் பாடத் திட்டத்தில், ஏராளமாய் புகுத்தி வருகிறார்கள். விமானக் கட்டல், உலோக சாஸ்திரம், யந்



திரங்கள் முதலியவை பற்றிய புத்தகங்கள் புதிதுபுதிதாய்த் தயாரிக்கப்பட்டிருக்கின்றன.

சர்க்கார் ஸ்தாபனங்கள் இப்படிச் செய்து வருகையில் சர்க்கார் சம்பந்தமற்ற தலைவர்கள் ஸ்தாபனமான அமெரிக்க விமானப் பயிற்சி படை, இந்தத் திட்டத்தில் வாலிபர்களுக்கும் ஊக்க மூட்டவும் பள்ளிகளில் வாலண்டரி மாணவர்களுக்கு அமெரிக்கச் சைன்யம் கடற்படை இவற்றின் உதவி கொண்டு விசேஷ தேகப் பயிற்சியும் பிரதம பறக்கும் பயற்சியும் அளிக்கவும் ஏற்பாடு செய்து வருகிறது.

## ஹிட்லர் கொடுமைகள்

## Hitler's Cruelties

"காந்தியடிகளும், மிஸ்டர் நேருவும் மோசமான பிரிட்டிஷ் ஏஜெண்டுகள்" என்றும், "இந்தியத் தலைவர்கள் தவறான வழியில் போய்க் கொண்டிருக்கிறார்கள். இவர்கள் பிரிட்டிஷாரின் கையாட்கள்" என்றும் பெர்லின் ரேடியோ இந்துஸ்தானியில் கூறியதாம்.

கீவ் நகரத்துக்குள் நுழைந்த அன்றே ஒரே நாளில் 54,000 பொது மக்களை ஹிட்லர் கொன்றுள்ளாராம். என்ன கொடுமை! தான் பிடித்த நாடுகளில் ஒரு குற்றமும் செய்யாதவர்களையும், ஊரிலுள்ள முக்கியஸ்தர்களையும் ஹிட்லர் நாள்தோறும் கைது செய்து ஊருக்கு வெளியே கொண்டுபோய்ச் சுட்டுக் கொன்று கொண்டிருக்கிறாராம்.

## ஹிட்லரும் ஸ்டாலின்கிராடும்

## Hitler & Stalinguard

### I

ஸ்டாலின் கிராடைப் பிடிக்க ஹிட்லரும், நாஜிகளும் படாத பாடும் சொல்ல முடியாத பலியும் கொடுத்து வருகின்றனர். இந்தத் தோல்வியால் ஹிட்லருக்குப் பெரிய மானக்கேடாயிருக்கிறது. அவருடைய ஜெர்மானியிலும் உள்நாட்டுக் குழப்பங்களும் குறை கூறுதல்களும் கலகங்களும் மிகவும் அதிகப்பட்டுக் கொண்டே வருகின்றன. ஹிட்லர் பிடித்த நாடுகளிலுள்ள மக்களெல்லாம் உள்ளே மனமார ஹிட்லரின் இத்தோல்வியைக்கண்டு மகிழ்ந்து கொண்டு, வருகின்றனர். அவர்களெல்லாம் ஹிட்லரின் அழிவுக்கும் நேசநாடுகளின் வெற்றிக்கும் தினமும் மனமாறப் பிரார்த்தனை புரிந்து வருகின்றனர். அவர்களுடைய பிரார்த்தனைகளை யெல்லாம் ஆண்டவன் நிறைவேற்றுவாராக.

### II

ருஷிய மக்களின் வீரம் எத்தகையதென்பதை இச்சமயம் ஒவ்வொரு நாடும் கவனித்து மூக்கின் மேல் கையை வைத்துக்கொண்டு வருகிறது. முன்பு பின்லாந்தில் ஏதோ ருஷியர்கள் தடுமாறிப் போனார்களென்றும், இவர்கள் எப்படி இந்த ஹிட்லர் அரக்கனைச் சமாளிக்கப் போகிறார்களென்றும் உலகம் நினைத்தது. ஆனால் அந்த நினைவுகளெல்லாம் இன்று கனவுகள் போல் பறந்தோடிவிட்டன. இத்தனை நாடுகளை ஜெயித்த ஹிட்லர் தன் அரக்க சேனைகளோடு இத்தனை நாடுகளிலுள்ள ஆள்பலம், உணவும் பலம், ஆயுதபலம், பிரசார பலமும் வைத்துக்கொண்டும் ரஷ்யாவை அசைக்க முடியவில்லை யென்றால், ரஷ்யாவின் பலத்தை உலகம் எப்படி மெச்சாமலிருக்க முடியும்?

ஒருதரம் தோற்றவன் மறுபடியும் பாய்ந்து வரும்போது, இன்

னும் எவ்வளவு ஆக்ரோஷத்துடனும் பலத்துடனும் வருவான். அப்படியிருந்தும் இரண்டாந்தடவையும் ஹிட்லரின் பலம் சாயவில்லையென்றால், ருஷ்யர்களின் வீரத்தை எங்ஙனம் போற்றுவது? 'ருஷ்யா வாழ்க! ருஷ்யர்கள் வாழ்க!!' வென்றே நாம் மட்டுமல்ல, நேசநாடுகளெல்லாம் வாழ்த்துகின்றன. இதிலிருந்து நாம் அறிந்து கொள்ளக்கூடிய படிப்பினை ஒன்றேதான். அதையே முஸ்லிம்களாய நாமும் நம் மனத்தில் பசுமரத்தாணிபோல் பதிய வைத்துக்கொள்ளவேண்டும். அதாவது, ருஷ்யாவில் உள்ள ஒவ்வொரு ஆண், பெண், குழந்தையும் எவ்வளவு ஒற்றுமையுடனும் மன உறுதியுடனும் எதிரியை வீழ்த்தக் கங்கணங் கட்டிக்கொண்டிருக்கிறார்கள்; ஏகமனதாக தினப் பிரார்த்தனை புரிகிறார்கள் என்பதையே கவனிக்கவேண்டும். ஒரு நாட்டில் வாழும் மக்கள் கூட்டம் ஒரே கவலையாய், ஒரே உண்மையாய் நன்மைக்கும், சத்தியத்துக்கும் நேர்மையாய், ஆண்டவனிடம் இறைஞ்சும்போது, அவ்வாண்டவன் எப்படி அவர்களைக் கைவிடுவான்! நேரான பாதையில் சீராக நடப்போருக்கு அவனைவிட துணை வேறு யார் உளர்! எனவே, அவர்களைக் காப்பதில் அவ்விறைவன் கண்ணுங் கருத்துமாயிருக்கிறான். எந்த நிமிஷம் அவன் நினைக்கிறானோ அன்றே கொடியவர்கள் நாசம் அடையப்போகின்றனர் என்பது திண்ணம்.

## மதிப்புரை
## Review

### 'கம்பராமாயணத்தை ஏன் கொளுத்தவேண்டும்?'

(இந்நூலின் ஆசிரியர் 'மதனீ'; இதன் விலை—1½ அணா ஸ்டாம்பு அனுப்பினால் ஒரு பிரதி அனுப்பப்படுமோம். கிடைக்குமிடம் & பிரசுரித்தவர்கள்:—ஹாஜிஜி சன்ஸ், ஆத்தூர், (சேலம்).

12 பக்கங்களை கொண்டன இச்சிறு நூலில் கம்பராமாயணத்தை ஏன் கொளுத்த வேண்டும் என்பதற்குக் காரணமாக உள்ள கம்பனின் இழி கூற்றுக்கள் கண்டிக்கப்பட்டுள்ளன. 'கம்பராமாயணம்' என்னும் நூலின் காரணமாகவே தமிழர்கள், எவ்வளவு இழிவாக ஆக்கப்பட்டு இன்றும் அதன்படியே மதிக்கப்பட்டும் வருகிறார்களென்பதை இதன் ஆசிரியர் உண்மைத் தமிழர் என்ற முறையில் இரத்தக் கொதிப்புடன் எடுத்துக் காட்ட முயன்றிருக்கிறார். இவருக்குள்ள ஆர்வமும் ஆத்திரமும் 1000த்தில் 5 தமிழர்களுக்காவது உண்டா என்பதுதான் கேள்வி. உண்டாயின், தமிழ் நாட்டில் தமிழர்கள் இன்றுள்ள கேவல நிலையில் இருக்கக் காரணமேயில்லை. இப்படிப்பட்ட சிறு நூல்களைத் தமிழ் நாட்டில் பரவச் செய்தால் தான் தமிழ் மக்களுக்குள் கண் விழிப்பு உண்டாகுமென்பதில் ஐயமில்லை.

---

பிரஸிடெண்ட் ரூஸ்வெல்ட், 1943-ஆம் வருடத்தில் யுனைடெட் ஸ்டேட்ஸுக்கு யுத்தச் செலவுமட்டும் 100,000,000,000 டாலர்கள் (அதாவது 30 ஆயிரம் கோடிரூபாய்கள்) ஆகுமென்று சொல்லுகிறார். ரஷ்யாவில் சமீபித்துவிட்ட இந்தக் குளிர்காலத்தில் பத்து லட்சக்கணக்கான ஜெர்மனியர்கள் மடியப்போவது திண்ணமென்றும், ரஷ்யா தனது நேச நாடுகளின் உதவியைக் கொண்டு, கடைசிவரை போராடி தன்னுடைய நிலத்தில் ஒரு நாஜியும் இல்லாதபடி துரத்தப் போவது முடிவான உண்மையென்றும் கூறியிருக்கிறார்.



## நோட்டுகளில் அரசியல் பிரசாரம்.
## Political Propaganda on Currency Notes.

சமீபமாய் வெளியிடப் பட்டுள்ள அவசரச்சட்டம் ஒன்றின்படி, இந்தியா கவர்மெண்டில் நோட்டுகளின் மீதோ ஒரு ரூபாய் நோட்டுகளின் மீதோ, அரசியல் சம்பந்தமான விஷயம் எதையாகிலும் தெரிவிக்கவேண்டும் என்னும் உத்தேசத்துடனாவது தெரிவிக்கக் கூடிய வகையிலாவது ஏதேனும் வார்த்தைகள் எழுதப்பட்டிருந்தாலும், கண்ணுக்குப் புலப்படக்கூடியபடி அடையாளங்கள்செய்யப்பட்டிருந்தாலும் அவைகள் செலாவணி ஆகமாட்டா. 1897-ம் வருஷத்துப் பொதுப் பகுதிகள் சட்டத்தைச் சேர்ந்த 3-ம் பிரிவின் 58-வது பகுதியின்படி எழுதப்பட்டிருந்தாலும் என்னும் வார்த்தையில், அச்சு, லித்தோ, புகைப்படம் ஆகிய முறைகளும் கண்ணுக்குப் புலப்படக்கூடியபடி அடையாளமிடும் அல்லது பதிவு செய்யும் இதர முறைகளும் அடங்கும்.

இனிமேல் இப்படிப்பட்ட நோட்டுகளை வாங்கிக்கொள்ளவோ இதர நோட்டுகள் கொடுத்து அவைகளை மாற்றிக் கொள்ளவோ அவைகளுக்குப் பதிலாக ரூபாய் நாணயமோ இதர நாணயமோ கொடுக்கவோ இந்தியா ரிசர்வ் பாங்க் கடமைப்பட்டதாகாது. அப்படிப்பட்ட நோட்டுகளின் மதிப்பைத் திருப்பித் தரவும் அது கடமைப்பட்டதாகாது.

ஆயினும், மேற்படி அவசரச் சட்டத்துக்குச் சேர்க்கப்பட்டுள்ள விலக்கு நிபந்தனையின்படி இந்தியா ரிசர்வ் பாங்கானது தனக்கு யுக்தமாகத் தோன்றினால் அப்படிக் கெடுக்கப்பட்டுள்ள நோட்டுகளின்மொத்த மதிப்பையோ அதிலொரு பகுதியையோ தயா விஷயமாகத் திருப்பித் தரலாம்.

ஆகவே, இத்தகைய நோட்டுகளை வாங்கக்கூடாதென்று பொது ஜனங்களுக்கு எச்சரிக்கை செய்யப் படுகிறது. இப்படிக் கெடுக்கப்பட்டநோட்டுகள் செலாவணியாக மாட்டாவென்று விதிக்கப்பட்டு விட்டபடியால் அவர்கள் அவைகளைப் பெற்றுக் கொள்ள மறுக்கலாம்.

## இதுவே சரி
## This is Right!

மன்னார்குடியில் ஹிந்துமுஸ்லிம்களுக்ககாக் கூட்டு அபராதம் விதிக்கப்பட்டதை நாம் அறிவோம். ஆனால் நமது தலைவர் காயிதே அஃலம் ஜனாப் ஜின்னாஹ் அவர்களின் சொற்படி முஸ்லிம்கள் யாரும் இப்பொழுது நடந்துவரும் பலவித கலவரங்களில் கலப்பதேயில்லை. இதை டில்லி மெம்பரும் மண[redacted] கொண்டு சபையில் பே[redacted] இஃது இங்கிலாந்தி[redacted] மன்றத்திலுங்கூட இந்தியா[redacted] யும் இதர பொறுப்புள்ள உத்தியோகஸ்தர்களும் இதை ஆமோதித்தே பல சமயங்களிலும் பேசியிருக்கின்றனர். எனவே, விலாசம் தெரியாத ஒரு சில ஆசாமிகள் செய்த குற்றத்துக்காக ஒன்றுமறியாத மற்ற முஸ்லிம்களும் தண்டிக்கப் படுவது அநீதியாகுமென நமது தலைவர் புகார் கூறினர். அதைக் கவர்ன்மெண்டும் ஒப்புக்கொள்ளாமலிருக்க முடியவில்லை. எனவேதான் பிரஸ்தாப முஸ்லிம்களிடமிருந்து வசூலித்த அபராதத் தொகையைச் சிலருக்கு மட்டில் சென்னை அரசாங்கத்தாரால் திருப்பிக் கொடுக்கப்பட்டதாகக் கேள்விப்பட்டு மகிழ்ச்சியடைகிறோம். இவ்விஷ

யம் நடந்தவரை சரிதானென்றில்லாமல் இதற்கென ஒரு சில பிரபல முஸ்லிம் கனவான்கள் இதை ரத்து செய்ய வேண்டுமெனப் பிரயத்தனப்பட்டதை நாம் மனமார வாழ்த்துகின்றோம்.

## முஸ்லிம்லீக் தீர்மானம்
## League's Decision

முஸ்லிம்லீக் காரியக் கமிட்டி, 8-11-1942-ல் செய்த தீர்மானத்தில் கூட்டு அபராதத்தைப் பற்றி பின் காணுமாறு ஒரு தீர்மானம் செய்திருக்கிறது:—

### கூட்டு அபராதம்

கூட்டு அபராதத்தைப் பற்றியும் இக்கமிட்டிக் கூட்டத்தில் ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது:—

முஸ்லிம்களுக்கும் சில இடங்களில் கூட்டு அபராதம் விதிக்கப்பட்டிருப்பதை இக்கமிட்டி கவனித்ததாகவும், சர்க்காரே முஸ்லிம்கள் தற்போது நடக்கும் கலவரங்களில் கலக்காமல் விலகி நிற்பதாக ஒப்புக்கொண்டிருக்கையில் மாகாண சர்க்கார்கள் ஏன் முஸ்லிம்களுக்குக் கூட்டு அபராதம் விதிப்பது முறையல்லவென்றும், ஆகவே இந்த முறையை அநுஷ்டிக்கும் மாகாண சர்க்கார் உடனே இந்தத் தவற்றைத் திருத்த வேண்டுமென்றும், அதற்கான ஏற்பாடுகள் மாகாண முஸ்லிம்கள் செய்தும் பயன்கிடைக்காவிட்டால் அகில இந்திய முஸ்லிம் லீக் காரியதரிசிக்கு விஷயத்தை அறிவிக்கவேண்டுமென்றும் அந்தத் தீர்மானத்தில் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

## மி. ஜின்னாவின் நிலையில் முன்னேற்றம் காண்கிறார்
## Mr. Jinnah Comes Forward

நியூஸ் கிரானிக்கிள் பத்திரிகையில் வெர்னன் பார்லட் பின் வருமாறு எழுதுகிறார்:—

இந்தியப் பிரச்னையைத் தீர்ப்பதற்கு இந்தப் பத்திரிகையில் அக்டோபர் 29-ந் தேதி யன்று கூறப்பட்டிருந்த யோசனையைப் பல பேர் கவனித்து அபிப்பிராயம் கூறியிருக்கிறார்கள். பிரிட்டனில் கன்சர்வேடிவ் கட்சித் தலைமை வகிக்கிறது; இந்த நிலையில் எந்தத் திட்டமும் விட்டுக்கொடுத்துச் சரிப்படுத்திக் கொள்வதாய்த்தானிருக்கும். அதனால் ஒருவரும் பூரண திருப்தியடைய முடியாது.

அபிப்பிராய பேதங்களைக் களைப்பக்கூடிய சட்டங்களைக் கூடியமட்டும் குறைத்துவிட வேண்டுமென்றும், கூடியவரை இந்தியாவின் தற்போதைய தற்காப்பையும் அதன் எதிர்கால அரசியலையும் பிரித்துவிட வேண்டுமென்றும் ஆலோசனை கூறும் இந்தத் திட்டத்திற்கு எதிர் பார்த்ததைவிட அதிக ஆதரவு கிடைத்திருக்கிறது. ஆயினும், இந்தியா கவர்ன்மெண்டானது என் திட்டத்தின்படி இது முற்றிலும் இந்தியமயமாயிருக்கும். இன்னமும், இந்திய சுதந்திரத்தின் அளவையும் தன்மையையும் ஒரு பிரதிநிதி சபை தீர்மானிக்கும்வரை பிரிட்டிஷ் சர்க்காருக்கு ஜவாப் சொல்லக் கூடியதாய்த்தானிருக்கவேண்டும் என்னும் நிபந்தனையை காங்கிரஸில் சற்று மிதமான பிரிவின் தலைவர் ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியார் ஆக்ஷேபிக்கிறார். புதிய மாகாண சட்டசபைகளைத் தேர்ந்தெடுத்து, அவைகளைக் கொண்டு புதிய மத்திய சட்டசபையைத் தேர்ந்தெடுக்க வேண்டுமென்பது அவரது திட்டம். ஆனால் முஸ்லிம் லீக் இதைக்கட்டாயம் ஒத்துக்கொள்ளாது. பிரிட்டிஷ் பார்லிமெண்ட் முறைக்குச் சரியான ஏற்பாடு எதையாவது செய்தால், நிலையாகப் பெ



ரும்பான்மையான ஹிந்து[illegible]ருக்கு மத்திய ஆட்சியில் ஆதிக்க[illegible]த்துவிடுமென்ற காரணத்தால் அத்தகைய தெதையும் இந்தியா விஷயத்தில் செய்யக்கூடாதென்பது அதன் ஆட்சேபனை. இந்திய சர்க்காருக்கு மேலதிகாரியாய் இருக்கக்கூடிய சட்டசபை நிலையாய்க் காங்கிரஸின் ஆதிக்கத்திலிருக்கவேண்டும் என்ற பட்சத்தில் அந்தச் சர்க்காரில் பாதி நிருவாகத்தை முஸ்லிம் மக்களுக்குக் கொடுப்பதாக ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியார் கூறுவதுகூட அவர்களுக்கு ஒன்றும் உற்சாகமூட்டாது. இந்தக் காரணத்தினால்தான் நான் கூறிய திட்டத்தில் மத்திய சட்டசபை விஷயத்தை ஒதுக்கிவைத்திருந்தேன்.

முஸ்லிம்லீக் தலைவர் மி. ஜின்னா இப்போது கூறுவதிலிருந்து, அவர் தமது பழைய நிலைமையினின்றும் சற்று முன்னுக்கு வந்திருப்பதாய்த் தெரிகிறது. பிரிட்டிஷ் சர்க்காரும் இந்தியாவின் சகல கட்சிகளும் முஸ்லிம்களின் சுய நிர்ணய உரிமையை ஏற்றுக்கொண்டு, முஸ்லிம்கள் பெரும்பான்மையினராயிருக்கும் பிரதேசங்களில் முஸ்லிம் பொதுஜன வாக்கை ஏற்றுக்கொள்வதாய் உறுதிகூற வேண்டுமென்பதுதான் அவருடைய முக்கியமான கோரிக்கை. ஆகவே, இந்தியாவின் மற்றப் பகுதியினின்றும் முஸ்லிம்கள் சுயேச்சையாய்ப் பிரிந்து நிற்கும் திட்டமாகிய பாகிஸ்தானையே அவர் இப்போது கோரவில்லை; யுத்தத்துக்குப் பிறகு தாங்கள் விரும்பும் பட்சத்தில் இந்தத் திட்டத்தை நிறைவேற்றிக் கொள்ள முஸ்லிம்களுக்கு உரிமையிருக்க வேண்டுமென்றுதான் சொல்லுகிறார்.

நான் கூறியுள்ள திட்டத்தை ஆதாரமாகக்கொண்டு காங்கிரஸுக்குத் திருப்தியளிக்கக்கூடியதொரு ஏற்பாட்டைச் செய்ய முடியுமென்று ஸ்ரீ ஜி. டி. பிர்லா கூறுவது நம்பிக்கைக்கு இடந்தருவதாய்க் கருதப்படுகிறது. ஏனெனில் அவர் அந்[illegible]யைத் தீவிரமாய் ஆதரிக்கும் பெரிய பணக்காரர் மட்டுமன்றி மகாத்மா காந்தியின் நெருங்கிய நண்பருமாவார்.

இந்தியாவில் பிரிட்டிஷ் நிருவாகத்தைப்பற்றித் தாங்கள் ஒன்றும் கூறக்கூடாதென்று பெரும்பாலான அமெரிக்கர்கள் வெகு ஜாக்கிரதையாயிருந்தபோதிலும், ஆங்கிலோ-அமெரிக்க வானில் இந்தியப் பிரச்னை என்னும் கருமேகம் கப்பிக்கிடக்கிறதென்பதில் சந்தேகமில்லை. நான் கூறிய ஆலோசனையைப்பற்றி, யார் யாரிடம் அதைப்பற்றி பேசியிருக்கிறேனோ அவர்களெல்லாம் அதை வரவேற்கிறார்கள் என்று நியூஸ் கிரானிக்கிள் பத்திரிகையின் வாஷிங்டன் நிருபர் கூறுகிறார். ஆகவே, இந்திய அரசியல் தலைவர்கள் அதை நிராகரித்துவிடும் பட்சத்தில் இந்தியர்கள் தங்களுக்குள்ளே ஒரு ஏற்பாடு செய்துகொண்டாலொழிய [redacted] பிரச்னையைத் தீர்க்க முடிய[redacted] னும் எண்ணம் பல [redacted] களுக்கு ஏற்பட்டுவிடும். [redacted] ஏற்பாடு நடப்பதாயிருந்[redacted] காலத்திலேயே கூட [redacted] அரசியல் மாறுதல்கள் [redacted] லாம் என்று லண்டன் [redacted] டாரங்களில் கூறப்படுகிறது[redacted]

## எதிரிகளால் ஹஜ் யாத்திரைக்குத் தடை.
## Haj Pilgrimage Not possible

இந்துக்கள் காசிக்கு யாத்திரை போவது போல, முஸ்லிம்கள் மக்காவிற்கும் மற்றும் பல ஊர்களுக்கும் யாத்திரை போய் வருவது வழக்கம். இதற்குத்தான் 'ஹஜ் யாத்திரை' என்று பெயர். இந்த யாத்திரையை முடித்துத் திரும்பியவர்களைத்தான் ஹாஜி என்னும் பட்டப் பெயர் கொண்டு அழைக்கிறார்கள். கொஞ்ச காலத்திற்கு முன்பு இந்த யாத்திரீகர்கள் 300 பேர்கள் கராச்சி துறை முகத்தில் வந்து சேர்ந்தார்கள். இவர்கள் தம் ஹஜ் யாத்திரையை முடிக்கத்

தமக்குக் கப்பல் வசதிகள் செய்து கொடுக்கும்படி இந்தியா அரசாங்கத்தாரைக்கோரி மனுச்செய்து கொண்டிருந்தனர். இதற்கு 1942-ம் வருஷம் அக்டோபர் மீ 28உ கராச்சி ஹஜ் யாத்திரீகர்கள் கமிட்டியாருக்கு இந்தியா அரசாங்கத்தார் பதில் தந்தி கொடுத்தார்கள். அதில் குறிப்பிட்டிருந்ததாவது :—

கடல் வழியாக ஹஜ் யாத்திரை செய்ய யாரும் ஏற்பாடுகள் செய்யக் கூடாதென்று எச்சரித்து இந்தியா அரசாங்காத்தார் ஏராளமாக விளம்பரம் செய்திருந்தும்கூட, இந்த யாத்திரீகர்கள் கராச்சி வந்து சேர்ந்து விட்டனர். இராக் வழியாகப் போக வேண்டியிருக்கிறதாகையால், அந்த வழியாகவும் அனுமதிக்க இயலவில்லை. இதுபற்றி சென்ற மாதம் அரசாங்கத்தார் ஒரு அறிக்கையை வெளியிட்டிருக்கிறார்கள். இந்த முடிவிற்கு வந்ததற்குக் காரணங்களை அந்த அறிக்கையில் குறிப்பிட்டிருக்கிறார்கள். "தற்போதுள்ள ஆபத்தான நிலைமையில், ஹஜ் கப்பல்களும் யாத்திரீகர்களும் ஆபத்திற்குள்ளாக நேருமாகையினால், இந்த வருஷம் ஹஜ் யாத்திரைக்கு இந்தியா சர்க்கார் ஏற்பாடு செய்து கொடுக்க முடியாதவர்களாயிருக்கிறார்கள்." துறைமுக ஹஜ் கமிட்டிப் பிரதிநிதிகளோடும், மத்திய ஹஜ் கமிட்டி அங்கத்தினர்களோடும், மற்ற முஸ்லிம் பிரதிநிதிகளோடும் கலந்து பேசிய பிறகுதான் இந்தத் தீர்மானத்திற்கு இந்தியா அரசாங்கத்தார் வந்தார்கள். இந்தத் தீர்மானத்தை அந்த முஸ்லிம் பிரதிநிதிகள் அனைவரும் ஒப்புக் கொண்டனர்.

### 1940-41-ல் மட்டும் நிலைமை வேறு?

1940-41-ம் வருஷத்திலும் யுத்தம் நடந்துகொண்டுதான் இருந்தது. அப்போது மட்டும் ஹஜ் யாத்திரைக்கு இந்தியா அரசாங்கத்தார் ஏற்பாடு செய்தார்களே! இப்போது மட்டும் ஏன் செய்யக்கூடாது என்னும் கேள்வி எழுவது இயற்கை தான். 1940-ல் பிரிட்டனுடன் இத்தாலியும் ஜெர்மனியும் மட்டுந்தான் போராடிக் கொண்டிருந்தன. ஜெர்மனியர்களால் தான் கப்பல்கள் போக்குவரவிற்கு ஆபத்துக்கள் ஏற்படக்கூடும். அப்போது இத்தாலியில் ஏராளமான முஸ்லிம்கள் இருந்தனர். எனவே "முஸ்லிம்களின் பாதுகாவலன்" என்னும் பட்டப் பெயரை முஸோலினி தனக்குச் சூட்டிக் கொண்டிருந்தார். ஆகையால் தன் மீது அன்பாக உள்ள முஸ்லிம்களின் வெறுப்புக்கு அவர் ஆளாக விரும்ப மாட்டார். எனவே, முஸ்லிம்களுக்கு விரோதமாக, அவர் எதுவும் செய்யமாட்டார். ஆனால் இப்போது ஜப்பானும் யுத்தத்தில் கலந்துவிட்டது. எனவே, நிலைமை மாறிவிட்டது. ஜப்பானில் முஸ்லிம்கள் கிடையாது என்றுதான் சொல்லவேண்டும். எனவே தாம் கைப்பற்றியுள்ள நாடுகளிலுள்ள முஸ்லிம்களின் உணர்ச்சிகளை அவர்கள் மதிப்பதில்லை. ஆகையால் ஜப்பானிய நீர் மூழ்கிக் கப்பல்களால், ஹஜ் யாத்திரைக் கப்பல்களுக்கு ஆபத்து நேரக்கூடும். இந்த நீர் மூழ்கிகள் இந்திய சமுத்திரத்திலும் அரபிக் கடலிலும் சஞ்சரிக்கின்றனவென்று கருத இடமிருக்கிறது.

### எகிப்தில் பிரிட்டிஷ் வெற்றி

### British success in Egypt

எல் அலமீனில் நடைபெறும் யுத்தம் ஒரு முடிவடையத் தக்க நிலைமைக்கு வந்துவிட்டது. இதிலிருந்து ஒரு விஷயம் மட்டும் தெளிவாகத் தெரிகிறது.

நேச தேசப் படைகள் எதிரி அரண்களை நொறுக்கித் தள்ளிக் கொண்டு, ரோமல் படைகளின் இடது புறத்தைத் துளைத்துக் கொண்டு, தாண்டிப் போய் தாம் எதிரிப் படைகளுக்கு மேற்கே வேரூன்றிக் கொண்டன. ஆகவே ரோமல் படைகளால் பல இப்போது வலையில் சிக்கியது போலச் சிக்கிக்



கொண்டிருக்கின்றன. [illegible] ஒரு கைத் உறுதியாக வைத்துக் [illegible] ரம். மிலான் திரு நாட்டுப் படைகள் [illegible] கம். கரை வழியாக வரும் முயன்று வருகின்றன. [illegible] ஜெர்மன் சப்ளை சாமான்களை இங்கிருந்து தான் கப்பலேற்றி சிசிலி வழியாக வடஆப்ரிக்காவிலுள்ள தம் படைகளுக்கு அனுப்புகிறார்கள். க்ரீட் தீவிலுள்ள சூடா விரிகுடாவிற்கு தென் மேற்கே மேலிம் விமான நிலையம் இருக்கிறது. இதன் வழியாகத் தான் ரோமலுக்கு விமான பலம் அவ்வப்போது வந்து கொண்டிருந்தது. இதையும் நேச நாட்டு விமானங்கள் நாசஞ் செய்து விட்டன.

இடங் கொடுக்கக் கூடாதென்[illegible] நோக்கத்தோடு ரோமல் தன் [illegible]கிப் படைகளைக் கொண்டு கடுமையாகத் தாக்கினர். ஆனால் இந்த டாங்கிகளும் வலையில் சிக்கிக்கொண்டன. மீளுவது கஷ்டம். நம் நேச நாட்டுப் படைத் தலைவர் ஜெனரல் மான்ட்காமெரி இன்னும் கடுமையான யுத்தத்திற்குத் தன்னை ஆயத்தம் செய்து கொள்ளவேண்டும்.

நேர் முகமாகவே போராடி எதிரியை வெல்ல வேண்டுமென்று ஜெனரல் மான்ட்காமெரி விரும்புகிறார். இது சற்று கடுமைதான்; நெடுங்காலமும் செல்லும். ஆனால் இந்த முயற்சிக்கு ஊக்கங் கொடுக்கக்கூடிய 4 அறிகுறிகள் இப்போது தோன்றுகின்றன. ஒன்று மிகுந்த விமான பலம். மத்திய தரைக்கடலில் நேச நாட்டு விமானப் படைகள் நடத்திய போராட்டத்தைக்கொண்டு நம் விமான பலம் மிகவும்மேலானது என்று தெரிகிறது. சென்ற செப்டெம்பர் மாதம் ரோமல் தோல்வி யுற்றது முதல், எதிரி துறைமுகங்களையும் அவர்களுக்கு வரும் சப்ளை கப்பல்களையும் நாசம் செய்து, அவர்கள் கையிருப்பில் வைத்திருந்த விமானங்கள், பெட்ரோல், வெடி மருந்துகள், போக்கு வரவிற்கான மோட்டார் வண்டிகள், பல எதிரி கப்பல்கள் ஆகியவற்றை மத்தியதரைக் கடலிலேயே விமானங்களிலிருந்து தாக்கி மூழ்கச் செய்துவிட்டனர். வட ஆப்ரிக்காவிற்கு எதிரிகள் சப்ளை போகவொட்டாதபடி தடுக்க வேண்டித்தான் ஜினோவா, டூரின். மிலான் ஆகிய ஊர்களை நேச நாட்டு விமானங்கள் கடுமையாகத் தாக்கின. ஜினோவா எதிரிகளின் முக்கியமான துறைமுகங்களில் ஒன்று. இங்கிருந்து தான் [illegible] தீவிற்கும், அங்கிருந்து லிபியாவிற்கும், எதிரிகள் தம் படைகளுக்கு சப்ளை அனுப்

இரண்டாவதாக, ரோமலின் படைகள் என்னதான் கடுமையாகத் தம்மைத் தாக்கினாலும், அதைச் சமாளித்துக் கொள்ளும் பலம் நேச நாட்டுப் படைகளுக்கு உ[illegible]

மூன்றாவதாக, எதிரி அ[illegible] முதல் இரண்டு வரிசைகள[illegible] யான பிளவுகள் கண்டிரு[illegible] எதிரிகள் தம் அரண்களா[illegible] வெடிகளை அமைத்திருந்[illegible]லும், அந்தப் பகுதியிலும் [illegible]டுப் படைகள் பிளவு கண்டு[illegible] களின் பலமான பாகங்களை [illegible] விட்டார்கள், விமானங்களி[illegible] தும் வெடி குண்டுகளை எ[illegible] கள் இந்த உதவியால், நம் [illegible] படைகளுக்குப் பக்கத் து[illegible] பிரிட்டிஷாருக்கும் அமெரிக்கர்[illegible] கும் சொந்தமான டாங்கிப் [illegible] யும் முன்னேறிக்கொண்டிருக்க[illegible] ஆனால் இப்போதுள்ள கடலு[illegible] கட்டாராவிற்கும் இடையிலுள்ள போர்க்களத்தில், ஒரே மட்டாகப் பெரும் படைகளைக் கொண்டு தாக்குவது என்பது முடியாத காரியம். தாக்க வேண்டுமானால், எதிரியின் அரண்களை நம் காலாட் படைகள் தகர்த்து வெல்லவேண்டும்.

முதலில் சதாரணமாகத் தகர்க்க முடியாத அரண்களைத் தகர்க்கிறதற்காகத் தான் டாங்கிகளைக் கண்டு பிடித்தார்கள். நாளடைவில் யுத்தக் தளவாடங்களில் முக்கியமானதாக

இது ஆகிவிட்டது. டாங்கிகளை எதிர்த்துப் போராட வேண்டுமானால், வழியில் சுரங்க வெடிகளைப் போட்டு டாங்கிகளைத் தடுத்து பீரங்கிகளைக் கொண்டு அவற்றை நாசஞ் செய்யவேண்டும். ஆகையால் டாங்கிப் படைகளுக்கு முன்னே காலாட் படைகளை அனுப்பி சுரங்க வெடிகளை எல்லாம் அப்புறப் படுத்திய பிறகு தான், நேச நாட்டு டாங்கிப் படைகள் முன்னேறிப் போகின்றன. பிறகு இந்தப் படைகள் குதிரைப் படையைப் போல வேலை செய்கின்றன.

நான்காவதாக, எதிரிப் படைகள் உள்ள இடம் 400 அடி பள்ளத்திலிருக்கிறது. ஆகவே இங்கிருந்து அவர்களை இலகுவில் வெல்லக்கூடும்.

இவை நமக்குள்ள வசதிகள் என்றாலும், சில வசதிக் குறைவுகளும் நமக்கு இருக்கின்றன. எதிரிகள் கட்டிய அரண்கள் பலமான ஆபிரிக்கப் படைகளின் கடும் எதிர்ப்பு ஆகியவை நமக்குள்ள வசதிக் குறை... இந்த ஆபிரிக்கப் படைகள் ...மைகளைக் காப்பாற்றிக் ... மகா பிடிவாதத்தோடு ...க் கூடியவை. ... ராமல் ...துள்ள அரண்கள் மிகவும் ...யானவை. ஆகையால் அவற்றைத் தகர்க்க நேச நாட்டுப் படைகளுக்குக் கொஞ்ச காலம் செல்லும். அதுவரை போர்முனையிலிருந்து முக்கியமான எந்தச் செய்தியும் கிடைக்காதென்று தெரிகிறது. டாங்கி எதிர்ப்பு பீரங்கிகள், பரந்த இடங்களில் சுரங்க வெடிகளைப் போட்டு வைத்தல், முள் வேலிகளை அமைத்தல், மறைவான இடங்களில் மிஷின் பீரங்கிகளை மறைத்து வைத்தல், பீரங்கிகளைத் தகுந்த இடங்களில் நிறுத்தி வைத்தல். இத்தனை வசதி அரண்களுக்குள்ளாகத் தான் இத்தாலியப் படைகளும் ஜெர்மென் படைகளும் அங்கே இருக்கின்றன.

காலாட் படைகளைக் கொண்டு எதிரி அரண்களைத் தகர்க்கும் முறையை ஜெனரல் மான்ட்காமெரி இப்போது விட்டு விட்டு, வேறொரு புதிய முறையைக் கையாளுகிறார்கள். இதுவரை இல்லாத அளவிற்கு ஒரு பெரிய பீரங்கிப் படையை அவர் திரட்டி வைத்துக் கொண்டு இருக்கிறார். எதிரி பீரங்கிகளை வைத்திருக்கும் இடங்களையும் எதிரிகளுக்கு சப்ளைகள் வரும் பாதையையும் விமானங்களிலிருந்து தாக்கும்படி செய்து, அதே சமயத்தில், நன்றாகத் தேர்ந்த காலாட் படைகளை முன்னேறும்படி செய்கிறார். ஷெல் குண்டுகளைக் கொண்டே எதிரி அரண்களைத் தகர்த்து விடவேண்டுமென்று விரும்புகிறார். இதில் வெற்றி பெறுவார் என்பது உறுதி.

# சந்தா நேயர்களுக்கு அறிவிப்பு

கவர்மெண்டார் நமக்குக் காகித அளவு மிகவும் குறைத்துக் கொடுத்துள்ளார்களாதலாலும் பேப்பர் அகப்படாக் குறையாலும் செப்டம்பர், அக்டோபர் மாத இதழ்களை ஒன்றாகவே சேர்த்து வெளியிட்டுள்ளோம். அதற்காகச் சில பக்கங்களை அதிகமாகச் சேர்த்துள்ளோம். சந்தா நேயர்களின் அன்பும் ஆதரவுமிருப்பின் இனி கிரமமாகக் கூடியவரை பக்கங்களைக் குறைக்காமலும் ஒவ்வொரு மாதமும் தவறாமலும் பத்திரிகையை வெளியிட முயற்சிக்கிறோம். நவம்பர் இதழ் விரைவில் பல மாறுதல்களுடன் சிறப்பாக வெளிவரும்.

1942ளு அக்டோபர்மீ த்தோடு சந்தா முடிந்து விட்ட நேயர்களின் சந்தா நெம்பர்கள் சென்ற இதழில் பிரசுரிக்கப்பட்டுள்ளன. அவ்வன்பர்களெல்லாம் தங்கள் சந்தாக்களைத் தாமதமின்றி அனுப்பி வைப்பார்களென எதிர்பார்க்கிறோம். ஒரு விபரமும் அறிவிக்காத நேயர்களுக்கு முன் அறிவித்த படியே நாம் வி. பி. செய்கிறோம். அதை அன்புடன் பெற்று என்னை ஆதரிப்பார்களெனக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

Intentional duplicate exposure

"நூருல் இஸ்லாம் [illegible] சங்கம்.




இவர் யார்?

இவரைக் கண்டு சிலர் ஏன் வயிறெரிகின்றனர்?

(28, 39 - ஆம் பக்கங்கள் பார்க்க)

1942 Bombay

